ஸ்ரீகுருஜகன்னாத தாஸரின்

# ஸ்ரீவெங்கடேஷ & லட்சுமி ஸ்தவராஜா, ஸ்ரீலட்சுமி ஹ்ருதய

**(தமிழில் - அர்த்த விளக்கங்களுடன்)**

தமிழில்

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
**89044 58276. haridasa.vijayam@gmail.com**
**jagannathakesava.blogspot.com**

**ஸ்ரீகுருஜகன்னாத தாஸரின்**
**ஸ்ரீவெங்கடேஷ & லட்சுமி ஸ்தவராஜா,**
**ஸ்ரீலட்சுமி ஹ்ருதய**
**(தமிழில் – அர்த்த விளக்கங்களுடன்)**

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
சிராவண சுத்த த்ருதியை – ஆகஸ்ட் 19,2023 அன்று
இபராமபுர ஸ்ரீஅப்பாவரு அவர்களின் ஆராதனையன்று
அன்று வெளியிடப்பட்டது.

**தொடர்புக்கு:**
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
8904458276 haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

**புத்தகத்தில் இருப்பவை:**

**நன்றி! நன்றி!! நன்றி!!!**

ஸ்ரீகுருஜகன்னாத தாஸர் இயற்றிய ஸ்ரீவெங்கடேஷ ஸ்தவராஜ, லட்சுமி ஸ்தவராஜ மற்றும் லட்சுமி ஹ்ருதய – இதன் தமிழ் அர்த்த விளக்கங்களை கொண்டிருக்கும் இந்தப் புத்தகத்தை வெளியிட பொருளுதவி செய்த கோவையைச் சேர்ந்த அன்பருக்கு நமது பணிவான நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

**ஶ்ரீகுருப்யோ நம:**

# ஶ்ரீவெங்கடேஷ ஸ்தவராஜ

## ஶ்ரீகுருஜகன்னாததாஸர் இயற்றியது
## (மூலம் மட்டும் – பாராயணத்திற்காக)

ஶ்ரீரமண ஸர்வேஶ சர்வக3
ஸாரபோ4க்த ஸ்வதந்த்ர ஸர்வத3s
பார மஹிமோதா3ர ஸத்கு3ண பூர்ண க3ம்பீ4ர |
ஸாரித3வரக4 தூ3ரகெ3யிஸி
ஸூரிஜனரிகெ3 ஸௌக்2ய நீடு3வ
தீ4ர வெங்கடரமண கருணதி3 பொரெயோ நீ என்ன ||1

க4ன்ன மஹிமாபன்ன பாலக
நின்ன ஹொரதின்னன்ய தே3வர
மன்னத3லின நா நெனெஸெனெந்தி3கு3 ப3ன்ன ப3டி3ஸதி3ரு |
என்ன பாலக நீனெ இருதிரெ
இன்னு ப4வப4யவேகெ எனகெ3
சன்னவெங்கடரமண கருணதி3 பொரெயொ நீ என்ன ||2

லகுமி பொ3ம்ம ப4வாமரேஶரு
ப4குதிபூர்வக நின்ன ப4ஜிஸீ
ஸகலலோகக்கெ நாத2னெனிபரு ஸர்வகாலத3லி |
நிகி2ளஜீவர பொரெவோ தே3வனெ
ப4குதி நீயெனகீ3யதி3ரலு
வ்யகுதவாக்3யபகீர்த்தி ப3ப்புதோ3 ஶ்ரீநிகேதனனே ||3

யாகெ புட்டதோ3 கருண என்னொளு
ஸாகலாரெய நின்ன ஶரணன
நூகிபி3ட்டரெ நினகெ3 லோகதி3 க்2யாதி ப3ப்புவுதே3?|
நோக நீயனே நீனெ என்னனு
ஜோகெயிந்த3லி காயோ பி3ட3தெ3
ஏகதே3வனு நீனெ வெங்கட ஶேஷகி3ரிவாஸ ||4

அம்பு3ஜாம்ப3க நின்ன பத3யுக3
நம்பி3கொண்டீ3 பரியலிருதிரெ
டொ3ம்பெ3கா3ரன தெரதி3 நீ நிர்பா4க்3ய ஸ்தி2தி தோரெ |
பி3ம்ப3மூருதி நின்ன கரக3த
கம்பு3வரவே க3தியு விஶ்வ
குடும்பி3 என்னனு ஸலஹோ ஸந்தத ஶேஷகி3ரிவாஸா ||5

ஸாரஶிரி வைகுண்ட த்யஜிஸி
தா4ருணியொளு கொ3ல்லனாகி3
சோரகர்மவ மாடி3 ப3து3கித3 தா3ரிக3ரிகி3ல்ல |
ஸாரிபேளுவெ நின்ன கு3ணக3ள
பாரவாகி3ருதிஹவோ ஜனரிகெ3
தீ4ரவெங்கடரமண கருணதி3 பொரெயோ நீ என்ன ||6

நீர முளுகீ3 பா4ரபொத்து
தா4ருணீதளவகெ3து3 ஸிட்டிலி
க்ரூரனுத3ரவ ஸீளி கருளின மாலெ த4ரிஸித3ரு |
போர விப்ர குடா2ரி வனவன
சாரி கோ3ப திக3ம்ப3ராஶ்வவ
ஏரி போத3ரு பி3டெ3னோ வேங்கட ஶேஷகி3ரிவாஸா ||7

லட்சுமிநாயக ஸார்வபௌ4மனெ
பக்ஷிவாஹன பரமபுருஷனெ
மோக்ஷதா3யக ப்ராணஜனகனெ விஶ்வவ்யாபகனெ |
அக்ஷயாம்ப3ரவித்தி விஜயன
பக்ஷபாதவ மாடி3 கு1ருக3ள
லக்ஷ்யமாட3தெ3 கொந்தெ3யோ ஸ்ரீஶேஷகி3ரிவாஸா ||8

ஹிந்தெ3 நீ ப்ரஹ்லாத3 கோ3ஸுக3
எந்து3 நோட3த3 ரூபத4ரிஸீ
ப3ந்து3 தை3த்யன ஒட3ல ப3கெ3து3 பொரெதெ3 பா3லகன |
தந்தெ3தாய்க3ள பி3ட்டு விபினதி3
நிந்து3 தபிஸுவ பஞ்சவத்ஸர
கந்த3னா த்4ருவகொ3லிது3 பொரெதெ3யோ ஶேஷகி3ரிவாஸா ||9

மடு3வினொளகி3ஹ மகரி காலனு
பிடி3து3 பா3தி4ஸெ கரியு த்ரிஜக3
த்3வடெ3ய பாலிஸோ எனலு தக்ஷண ப3ந்து3 பாலிஸிதெ3 |
மட3தி3மாதனு கேளி ப3லுபரி
ப3ட3வ ப்ராம்ஹண தா4ன்யகொட3லு
பொட3விக3ஸத3ள பா4க்3ய நீடி3தெ3 ஶேஷகி3ரிவாஸா ||10

பிந்தெமாடி3த3 மஹிமெக3ள நா
நெந்து3 வர்ணிஸலேனுப2ல ஸ்ரீ
காந்த என்னனு பொரெயெ கீருதி நினகெ3 ப2லவெனகெ3 |
கந்துஜனகனெ என்ன மனஸின
அந்தரங்க3தி3 நீனெ ஸர்வத3
நிந்து ப்ரேரணெ மாள்பெ ஸர்வத3 ஶேஷகி3ரிவாஸா ||11

ஸ்ரீனிவாஸனெ ப4க்தபோஷனெ
ஞானிகுலக3ளிக3ப4ய தா3யக
தீ3னபா3ந்த4வ நீனெ என்னமனத3ர்த்த2 பூரெயிஸொ |
அனுபமோபமஞான ஸம்பத3
வினயபூர்வகவித்து பாலிஸோ
ஜனுமஜனுமகெ மரெயபே3ட3வோ ஶேஷகி3ரிவாஸா ||12

மத3வு மத்ஸர லோப4 மோஹவு
ஒத3க3பா3ரது3 என்ன மனத3லி
பது3மனாப4னெ ஞான ப4க்தி விரக்தி நீனித்து |
ஹ்ருதயமத்4யதி3 நின்ன ரூபவு
வத3னத3லி தவ நாம மந்த்ரவு
ஸத3ய பாலிஸோ பே3டி3கொம்பெனோ ஶேஷகி3ரிவாஸா ||13

அந்த3னுடி3 புஸியாக3பா3ரது3
ப3ந்த3 பா4க்3யவு ஹோாக3பா3ரது3
குந்து3 பா3ரதெ3 நின்ன கருணவு தி3னதி3 வர்த்தி4ஸலி |
நிந்தெ3 மாடு3வ ஜனர ஸங்க3வு
எந்தி3கா3த3ரு தொ3ரெய பா3ரது3
எந்து3 நின்னனு பே3டி3கொம்பெ3னோ ஶேஷகி3ரிவாஸா ||14

ஏனு பே3ட3லி என்ன தே3வனே
ஸானுராக3தி3 என்ன பாலிஸோ
நானாவித3வித3 ஸௌக்2ய நீடு3 இஹபரங்க3ளலி |
ஸ்ரீநிவாஸனெ நின்ன தாஸகெ3
ஏனுகொரெதில்லெல்லி நோட3லு
நீனெ நிந்தீவித4தி3 பேளிஸு ஶேஷகி3ரிவாஸா ||15

ஆரு முனித3வரேனு மாள்பரோ
ஆருவொலித3வரேனு மாள்பரோ
ஆரு ஸ்னேஹிக3ராரு த்3வேஷிக3ளாருதா3ஶினரு |
க்ரூர ஜீவர ஹணிது3 ஸாத்விக
தீ4ர ஜீவர பொரெது3 நின்னலி
ஸார ப4குதியனித்து பாலிஸோ ஶேஷகி3ரிவாஸா ||16

நின்ன ஸேவெயனித்து எனகீ3
நின்ன பத3யுக3 ப4க்தி நீடீ3
நின்ன கு3ண க3ண ஸ்தவன மாடு3வ ஞான நீனித்து |
என்ன மனத3லி நீனே நிந்தூ
க4ன்ன கார்யவ மாடி3 மாடி3ஸு
த4ன்யனெந்தெ3னிஸென்ன லோகதி3 ஶேஷகி3ரிவாஸா ||17

ஜயஜயது ஷட2 கூர்ம ரூபனெ
ஜயஜயது கிடி ஸிம்ஹ வாமன
ஜயஜயது ப்4ருகு3ராம ரகு4குல ஸோம ஸ்ரீராம |
ஜயஜயது ஶிரி யது3வரேண்யனெ
ஜயஜயது ஜனமோஹ பு3த்3த3னெ
ஜயஜயது கலிகல்மஷக்4னனெ கல்கி நாமகனெ|| 18

கருண ஸாக3ர நீனெ நிஜபத3
ஶரணவத்ஸல நீனே ஶாஶ்வத
ஶரணஜன மந்தா3ர கமலாகாந்த ஜயவந்த |
நிருத நின்னனு நுதிஸி பே3டு3வெ
வரத3 கு3ருஜக3ன்னாத2 விட்டல
பரம ப்ரேமதி3 பொரெயோ என்னனு ஶேஷகி3ரிவாஸா ||19

## ஶ்ரீகுருப்யோ நம:

# ஶ்ரீகுருஜகன்னாததாஸர் இயற்றிய ஶ்ரீவெங்கடேஷ ஸ்தவராஜ (தமிழில் அர்த்த விளக்கங்களுடன்)

ஶ்ரீரமண ஸர்வேஶ சர்வக$^{3}$
ஸாரபோ$^{4}$க்த ஸ்வதந்த்ர ஸர்வத$^{3}$s
பார மஹிமோதா$^{3}$ர ஸத்கு$^{3}$ண பூர்ண க$^{3}$ம்பீ$^{4}$ர |
ஸாரித$^{3}$வரக$^{4}$ தூ$^{3}$ரகெ$^{3}$யிஸி
ஸூரிஜனரிகெ$^{3}$ ஸௌக்$^{2}$ய நீடு$^{3}$வ
தீ$^{4}$ர வெங்கடரமண கருணதி$^{3}$ பொரெயோ நீ என்ன ||1

ஶ்ரீரமண - லட்சுமிதேவியின் தலைவன்; ஸர்வேஷ - அனைவருக்கும் ஈஷன்; ஸர்வக - அனைத்து இடங்களிலும் வ்யாபித்திருப்பவன்; ஸாரபோக்த - அனைத்து ஸாரங்களையும் (ரஸங்களையும்) ஏற்றுக் கொள்பவன்; ஸ்வதந்த்ர - அவன் மட்டுமே ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரன், மற்ற அனைவருமே அஸ்வதந்த்ரர்கள்; ஸர்வத அபார மஹிமா - எப்போதும் அபாரமான மகிமைகளைக் கொண்டவன்; உதார - கருணை வடிவமே ஆனவன்; ஸத்குண பூர்ண - நற்குணங்களை அனைத்தையும் முழுமையாகக் கொண்டவன்; கம்பீர - கம்பீரன்; ஸாரிதவரக தூரகெயிஸி - தன்னை வணங்குபவர்களின் கஷ்டங்களை தூர விலக்கி; ஸூரிஜனரிகெ - ஸஜ்ஜனர்களுக்கு; ஸௌக்ய நீடுவ - அவர்களுக்கு நலன்களை அருள்பவனான; தீர வேங்கட ரமண - தீர வேங்கட ரமணனே; கருணதி பொரெயோ நீ என்ன - நீ என்னை கருணையுடன் அருள்வாயாக.

லட்சுமிதேவியின் தலைவனே, அனைவருக்கும் ஈசனே, அனைத்து இடங்களிலும் வ்யாபித்திருப்பவனே, அனைத்து ரஸங்களையும் ஏற்றுக் கொள்பவனே, ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரனே, எப்போதும் அபாரமான மகிமைகளை கொண்டவனே, கருணை வடிவமே ஆனவனே, நற்குணங்கள் அனைத்தையும் முழுமையாகக் கொண்டவனே, கம்பீரனே, தன்னை வணங்குபவர்களின் கஷ்டங்களை தூர விலக்கி, ஸஜ்ஜனர்களுக்கு நலன்களை அருபவனே, தீர வேங்கடரமணனே, நீ என்னை கருணையுடன் அருள்வாயாக.

க[4]ன்ன மஹிமாபன்ன பாலக
நின்ன ஹொரதின்னன்ய தே[3]வர
மன்னத[3]லின நா நெனெஸெனெந்தி[3]கு[3] ப[3]ன்ன ப[3]டி[3]ஸதி[3]ரு |
என்ன பாலக நீனெ இருதிரெ
இன்னு ப[4]வப[4]யவேகெ எனகெ[3]
சன்னவெங்கடரமண கருணதி[3] பொரெயொ நீ என்ன ||2

கன்ன மஹிமா - அபாரமான மகிமைகளைக் கொண்டவன்; ஆபன்ன பாலக - கஷ்டத்தில் இருப்பவர்களை / தன் பக்தர்களை காப்பவன்; நின்ன ஹொரதின்னன்ய தேவர - உன்னைத் தவிர வேறு எந்த தேவரையும்; மன்னதலி நா - நான் என்னுடைய மனதில்; நெனெஸெனெந்திகு - என்றைக்கும் நினைக்க மாட்டேன். பன்ன படிஸதிரு - எனக்கு மேலும் மேலும் கஷ்டங்களை கொடுக்காமல் இரு; என்ன பாலக நீனெ இருதிரெ - என்னைக் காப்பவனாக நீயே இருக்கையில்; இன்னு பவபயவேகெ எனகெ - எனக்கு வேறு என்ன பயம் இருக்க முடியும்?; சன்ன வெங்கட ரமண - அழகான வெங்கட ரமணனே; கருணதி பொரெயோ நீ என்ன - என்னை நீ கருணையுடன் அருள்வாயாக.

அபாரமான மகிமைகளை கொண்டவனே, கஷ்டத்தில் இருப்பவர்களை / தன் பக்தர்களை காப்பவனே, உன்னைத் தவிர வேறு எந்த தேவரையும் நான் என்னுடைய மனதில் என்றைக்கும் நினைக்க மாட்டேன். எனக்கு மேலும் மேலும் கஷ்டங்களை கொடுக்காமல் இருப்பாயாக. என்னை காப்பவனாக நீயே இருக்கையில், எனக்கு வேறு என்ன பயம் இருக்க முடியும்?. அழகான வெங்கடரமணனே, என்னை நீ கருணையுடன் அருள்வாயாக.

லகுமி பொ[3]ம்ம ப[4]வாமரேஶரு
ப[4]குதிபூர்வக நின்ன ப[4]ஜிஸீ
ஸகலலோகக்கெ நாத[2]னெனிபரு ஸர்வகாலத[3]லி |
நிகி[2]ளஜீவர பொரெவோ தே[3]வனெ
ப[4]குதி நீயெனகீ[3]யதி[3]ரலு
வ்யகுதவாக்[3]யபகீர்த்தி ப[3]ப்புதோ[3] ஸ்ரீநிகேதனனே ||3

லகுமி பொம்ம - ஸ்ரீலட்சுமிதேவி, பிரம்மன்; பவாமரேஷரு - ருத்ரர் மற்றும் அனைத்து தேவர்களும்; பகுதி பூர்வக நின்ன பஜிஸீ - உன்னை

மிகவும் பக்தியுடன் வணங்கி; ஸகல லோகக்கெ நாதனெனிபரோ - உன்னையே அனைத்து உலகின் தலைவன் என்று நினைக்கிறார்கள்; ஸர்வ காலதலி - இந்த சிந்தனையானது அனைத்து காலங்களிலும் பொருந்துகிறது; நிகிள ஜீவர - அனைத்து ஜீவர்களையும்; பொரெவோ தேவனே - காப்பவனான தேவனே; பகுதி நீ எனகெ ஈயதிரலு - நீ எனக்கு பக்தியை வழங்காவிட்டால்; வ்யகுதவாகி அபகீர்த்தி - (உனக்கே) ஒரு அவச்சொல் / பழிச்சொல்; பப்புதோ - வந்து சேருமே; ஸ்ரீநிகேதனனே - ஸ்ரீலட்சுமிதேவி வசிக்கும் வக்ஷஸ்தளத்தைக் கொண்டவனே;

ஸ்ரீலட்சுமிதேவி, பிரம்மன், ருத்ரர் மற்றும் அனைத்து தேவர்களும் உன்னை மிகவும் பக்தியுடன் வணங்கி, உன்னையே அனைத்து உலகின் தலைவன் என்று நினைக்கிறார்கள். இந்த சிந்தனையானது அனைத்து காலங்களுக்கும் பொருந்துகிறது. அனைத்து ஜீவர்களையும் காப்பவனான தேவனே, நீ எனக்கு பக்தியை வழங்காவிட்டால், உனக்கே அவச்சொல் / பழிச்சொல் வந்து சேரும். ஸ்ரீலட்சுமிதேவி வசிக்கும் வக்ஷஸ்தளத்தை கொண்டவனே.

யாகெ புட்டதோ$^3$ கருண என்னொளு
ஸாகலாரெய நின்ன ஶரணன
நூகிபி$^3$ட்டரெ நினகெ$^3$ லோகதி$^3$ க்$^2$யாதி ப$^3$ப்புவுதே$^3$?|
நோக நீயனே நீனெ என்னனு
ஜோகெயிந்த$^3$லி காயோ பி$^3$ட$^3$தெ$^3$
ஏகதே$^3$வனு நீனெ வெங்கட ஶேஷகி$^3$ரிவாஸ ||4

யாகெ புட்டதோ கருண என்னொளு - என் மேல் ஏன் உனக்கு கருணை வரமாட்டேன் என்கிறது?; நின்ன ஷரணன - உன்னை சரணடைந்தவனை; ஸாகலாரெய - நீ காக்க மாட்டாயா?; நூகிபிட்டரெ - நீ என்னை புறக்கணித்தால்; நினகெ லோகதி - உனக்கு இந்த உலகில்; க்யாதி பப்புவுதே? - புகழ் குறைந்துவிடாதா?; நோகனீயனே - வளர்ச்சி / குறைவு அற்றவனே (நித்ய பரிபூர்ணனே) ; நீனெ என்னனு - நீயே என்னை; ஜோகெயிந்தலி காயோ பிடதெ - புறக்கணிக்காமல், கருணையுடன் காக்க வேண்டும்; ஏகதேவனு நீனே - நீயே ஸர்வோத்தமன்; வெங்கட சேஷகிரிவாஸ - வெங்கடனே, சேஷகிரியில் வசிப்பவனே.

என் மேல் ஏன் உனக்கு கருணை வரமாட்டேன் என்கிறது?. உன்னை சரணடைந்தவனை, நீ காக்க மாட்டாயா?. நீ என்னை புறக்கணித்தால் உனக்கு இந்த உலகில் புகழ் குறைந்துவிடாதா?. வளர்ச்சி / குறைவு அற்றவனே (நித்ய பரிபூர்ணனே), நீயே என்னை புறக்கணிக்காமல் கருணையுடன் காக்க வேண்டும். நீயே ஸர்வோத்தமன். வெங்கடனே, சேஷகிரியில் வசிப்பவனே.

அம்பு3ஜாம்ப3க நின்ன பத3யுக3
நம்பி3கொண்டீ3 பரியலிருதிரெ
டொ3ம்பெ3கா3ரன தெரதி3 நீ நிர்பா4க்3ய ஸ்தி2தி தோரெ |
பி3ம்ப3மூருதி நின்ன கரக3த
கம்பு3வரவே க3தியு விஶ்வ
குடும்பி3 என்னனு ஸலஹோ ஸந்தத ஶேஷகி3ரிவாஸா ||5

அம்புஜாம்பக - தாமரைக் கண்ணனே; நின்ன பதயுக - உன்னுடைய பாத பத்மங்களை; நம்பி கொண்டு - நம்பியவாறே; ஈ பரியலிருதிரெ - இப்படியாக நான் இருக்கையில்; டொம்பெகாரன தெரதி - ஒரு தேர்ந்த ஆட்டக்காரனைப் போல; நீ நிர்பாக்ய ஸ்திதி தோரே - நீ எனக்கு அருளாமல் விட்டுவிடுவாயா?; பிம்பமூருதி - என் மனதில் இருக்கும் பிம்பமூர்த்தியே; நின்ன கரகத - உன் கைகளில் இருக்கும்படியான; கம்புவரவே - சிறந்ததான சங்கு (கைகளில் வைத்திருப்பவனே); கதியோ - நீயே எனக்கு கதி ஆகிறாய்; விஷ்வகுடும்பி - உலகத்தையே தன் குடும்பமாக ஆக்கியிருப்பவனே (உலகத்தையே தன் வயிற்றில் வைத்திருப்பவனே); என்னனு ஸலஹோ ஸந்தத - என்னை எப்போதும் காப்பாற்றுவாயாக; சேஷகிரிவாஸ - சேஷாசல மலையில் வசிப்பவனே.

தாமரைக் கண்ணனே, உன்னுடைய பாத பத்மங்களை நம்பியவாறே நான் இருக்கையில், ஒரு தேர்ந்த ஆட்டக்காரனைப் போஒல நீ எனக்கு அருளாமல் விட்டுவிடுவாயா?. என் மனதில் இருக்கும் பிம்பமூர்த்தியே, உன் கைகளில் இருக்கும்படியான சிறந்ததான சங்கினை கைகளில் தரித்திருப்பவனே, நீயே எனக்கு கதி ஆகிறாய். உலகத்தையே தன் குடும்பமாக ஆக்கியிருப்பவனே (உலகத்தையே தன் வயிற்றில் வைத்திருப்பவனே), என்னை எப்போதும் காப்பாற்றுவாயாக, சேஷாசல மலையில் வசிப்பவனே.

ஸாரஶிரி வைகுண்ட த்யஜிஸி
தா$^{4}$ருணியொளு கொ$^{3}$ல்லனாகி$^{3}$
சோரகர்மவ மாடி$^{3}$ ப$^{3}$து$^{3}$கித$^{3}$ தா$^{3}$ரிக$^{3}$ரிகி$^{3}$ல்ல |
ஸாரிபேளுவெ நின்ன கு$^{3}$ணக$^{3}$ள
பாரவாகி$^{3}$ருதிஹவோ ஜனரிகெ$^{3}$
தீ$^{4}$ரவெங்கடரமண கருணதி$^{3}$ பொரெயோ நீ என்ன ||6

ஸாரஷிரி வைகுண்ட த்யஜிஸி - அனைத்து வித செல்வங்களையும் கொண்டதான வைகுண்டத்தை விட்டுவிட்டு; தாருணியொளு - இந்த பூமியில்; கொல்லனாகி - ஒரு இடையனாக; சோரகர்மவ மாடி - திருட்டுத்தனங்களை செய்தவாறு; பதுகித - வாழ்ந்த கதையை; தாரிகரிகில்ல - இந்த உலகில் இருக்கும் அனைவருக்கும்; ஸாரிபேளுவெ நின்ன குணகள - உன் குணங்களை நான் உரக்கச் சொல்வேன்; அபாரவாகிருதிஹவோ ஜனரிகெ - அவை மக்களுக்கு மிகவும் மகிழ்ச்சியை தரக்கூடியதாகும்; தீர வெங்கடரமண கருணதி பொரெயோ நீ என்ன - தீர வெங்கட ரமணனே, நீ என்னை கருணையுடன் காப்பாயாக.

அனைத்து வித செல்வங்களையும் கொண்டதான வைகுண்டத்தை விட்டு, இந்த பூமியில் ஒரு இடையனாக, திருட்டுத்தனங்களை செய்தவாறு, நீ வாழ்ந்த கதையை, உன் குணங்களை, இந்த உலகில் இருக்கும் அனைவருக்கும் நான் உரக்கச் சொல்வேன். அவை அனைத்து மக்களுக்கும் மிகவும் மகிழ்ச்சியை தரக்கூடியதாகும். தீர வெங்கடரமணனே, நீ என்னை கருணையுடன் காப்பாயாக.

நீர முளுகீ$^{3}$ பா$^{4}$ரபொத்து
தா$^{4}$ருணீதளவகெ$^{3}$து$^{3}$ ஸிட்டிலி
க்ரூரனுத$^{3}$ரவ ஸீளி கருளின மாலெ த$^{4}$ரிஸித$^{3}$ரு |
போர விப்ர குடா$^{2}$ரி வனவன
சாரி கோ$^{3}$ப திக$^{3}$ம்ப$^{3}$ராஶ்வவ
ஏரி போத$^{3}$ரு பி$^{3}$டெ$^{3}$னோ வேங்கட ஶேஷகி$^{3}$ரிவாஸா ||7

நீர முளுகி - மத்ஸ்யாவதாரமாக தண்ணீரில் இருந்தாய்; பாரபொத்து - பாற்கடலை கடையும்போது மலையை தாங்கிப் பிடித்தாய்; தாருணீதளவகெது - வராக அவதாரம் எடுத்து, பூமியை கிழித்துக் கொண்டு சென்று அசுரர்களைக் கொன்றாய்; ஸிட்டிலி க்ரூரனுதரவ

ஸீளி - பெரும் கோபத்துடன், அசுரர்களின் தலைவனின் வயிற்றினை கிழித்து; மாலெ தரிஸிதரு - மாலையாக அணிந்து கொண்டாய்; போர விப்ர - ஒரு பிராமண சிறுவனாக வந்தாய் (வாமன அவதாரம்); குடாரி - கோடலி பிடித்து பரசுராம அவதாரம் எடுத்தாய்; வனவன - ராமனாக வனங்களில் அலைந்தாய்; ஜாரி கோப - பெண்களை மயக்கும் கோபாலகனாக வந்தாய்; திகம்பராஷ்வவ ஏரி - திகம்பரனாக வந்த பௌத்தனே; குதிரையில் ஏறிச் செல்கிறாய் (கல்கி அவதாரமாக); போதரு பிடெனோ - இப்படி பல்வேறு லீலைகளை செய்து நீ சென்றாலும், நான் உன்னை விடமாட்டேன்; வெங்கட சேஷகிரிவாஸ - சேஷாசலத்தில் வசிக்கும் வேங்கடேசனே.

* மத்ஸ்யாவதாரமாக தண்ணீரில் இருந்தவனே,
* பாற்கடலில் மலையை தாங்கிப் பிடித்த கூர்மனே,
* வராக அவதாரத்தில் பூமியை கிழித்துக் கொண்டு, அசுரர்களை கொன்றவனே,
* பெரும் கோபத்துடன், அசுரர்களின் தலைவனின் வயிற்றினை கிழித்து, அவனது குடலை மாலையாக அணிந்தவனே,
* ஒரு பிராமண சிறுவனாக வந்த வாமனனே,
* கோடலி பிடித்து, பரசுராம அவதாரம் எடுத்தவனே,
* ராமனாக வனங்களில் அலைந்தவனே,
* பெண்களை மயக்கும் கோபாலகனாக கிருஷ்ணனாக வந்தவனே,
* திகம்பரனாக வந்த பௌத்தனே,
* குதிரையில் ஏறிச் சென்ற கல்கியே,

இப்படி நீ பல்வேறு லீலைகளை செய்து சென்றாலும், சேஷாசலத்தில் வசிக்கும் வெங்கடேசனே, நான் உன்னை விடமாட்டேன்.

லட்சுமிநாயக ஸார்வபௌ⁴மனெ
பக்ஷிவாஹன பரமபுருஷனெ
மோக்ஷதா³யக ப்ராணஜனகனெ விஶ்வவ்யாபகனெ |
அக்ஷயாம்ப³ரவித்தி விஜயன
பக்ஷபாதவ மாடி³ கு¹ருக³ள
லக்ஷ்யமாட³தெ³ கொந்தெ³யோ ஶ்ரீஶேஷகி³ரிவாஸா ||8

லட்சுமி நாயக - ஶ்ரீலட்சுமிதேவியின் தலைவனே; ஸார்வபௌமனே - ஸர்வோத்தமனே; பக்ஷிவாஹன - கருட வாகனனே; பரமபுருஷனே - க்ஷராக்ஷர புருஷர்கள் அனைவரிலும் சிறந்தவனான பகவந்தனே;

மோக்ஷ தாயக - கைவல்யதாயக என்றே பெயர் பெற்றவனான ஶ்ரீஹரி; ப்ராண ஜனகனே - முக்யபிராணரின் தந்தையே; விஷ்வ வ்யாபகனே - உலகில் அனைத்து இடங்களிலும் வ்யாபித்திருப்பவனே; அக்ஷயாம்பரவித்தி - திரௌபதிக்கு மானபங்கம் ஆன சமயத்தில், அவளுக்கு எல்லையற்ற ஆடைகளை அளித்து; விஜயன பக்ஷபாதவ மாடி - அர்ஜுனனுக்கு உதவியாக அவன் சார்பில் இருந்து கொண்டு; குருகள - கௌரவர்களை; லக்ஷ்யமாடதெ - பொருட்படுத்தாமல்; கொந்தேயோ - அவர்களை கொன்றாயே; ஶ்ரீசேஷ கிரிவாஸ - சேஷாசலத்தில் வசிப்பவனே.

ஶ்ரீலட்சுமிதேவியின் தலைவனே, ஸர்வோத்தமனே, கருட வாகனனே, க்ஷராக்ஷர புருஷர்கள் அனைவரிலும் சிறந்தவனான பகவந்தனே, கைவல்யதாயக என்றே பெயர் பெற்றவனான ஶ்ரீஹரியே, முக்யபிராணரின் தந்தையே, உலகில் அனைத்து இடங்களிலும் வ்யாபித்திருப்பவனே, திரௌபதிக்கு மானபங்கம் ஆன சமயத்தில், அவளுக்கு எல்லையற்ற ஆடைகளை அளித்தவனே, அர்ஜுனனுக்கு உதவியாக அவன் சார்பில் இருந்து கொண்டு, கௌரவர்களை பொருட்படுத்தாமல், அவர்களை கொன்றவனே, சேஷாசலத்தில் வசிப்பவனே.

ஹிந்தெ$^{3}$ நீ ப்ரஹ்லாத$^{3}$ கோ$^{3}$ஸுக$^{3}$
எந்து$^{3}$ நோட$^{3}$த$^{3}$ ரூபத$^{4}$ரிஸீ
ப$^{3}$ந்து$^{3}$ தை$^{3}$த்யன ஒட$^{3}$ல ப$^{3}$கெ$^{3}$து$^{3}$ பொரெதெ$^{3}$ பா$^{3}$லகன |
தந்தெ$^{3}$தாய்க$^{3}$ள பி$^{3}$ட்டு விபினதி$^{3}$
நிந்து$^{3}$ தபிஸுவ பஞ்சவத்ஸர
கந்த$^{3}$னா த்$^{4}$ருவகொ$^{3}$லிது$^{3}$ பொரெதெ$^{3}$யோ ஶேஷகி$^{3}$ரிவாஸா ||9

ஹிந்தே - முன்னர் க்ருத யுகத்தில்; நீ ப்ரஹ்லாத கோஸுக - பிரகலாதனுக்காக, நீ; எந்து நோடத ரூப தரிஸி பந்து - அதுவரை யாருமே பார்த்திருக்காத ரூபத்தை தாங்கியவாறு வந்து; தைத்யன ஒடல பகெது - தைத்யனின் உடலை கிழித்து; பொரெதெ பாலகன - சிறுவன் பிரகலாதனை காத்தாய்; தந்தெ தாய்கள பிட்டு - தன் பெற்றோரை விட்டு; விபினதி நிந்து - காட்டில் நின்றவாறு; தபிஸுவ - தவம் செய்தவனான; பஞ்சவத்ஸர கந்தனா - ஐந்து வயதே ஆன சிறுவனான; த்ருவகொலிது - த்ருவனுக்கு தரிசனம் அளித்து;

பொரெதெயொ - காத்தாயே; சேஷகிரிவாஸா - சேஷாசலத்தில் வசிப்பவனே.

முன்னர் க்ருத யுகத்தில், பிரகலாதனுக்காக, நீ அதுவரை யாருமே பார்த்திருக்காத நரசிம்ம ரூபத்தை தாங்கியவாறு வந்து, தைத்யனின் உடலை கிழித்து, சிறுவன் பிரகலாதனை காத்தாய். தன் பெற்றோரை விட்டு, காட்டில் நின்றவாறு, தவம் செய்தவனான, ஐந்து வயதே ஆன சிறுவனான, த்ருவனுக்கு தரிசனம் அளித்து காத்தவனே, சேஷாசலத்தில் வசிப்பவனே.

மடு$^3$வினொளகி$^3$ஹ மகரி காலனு
பிடி$^3$து$^3$ பா$^3$தி$^4$ஸெ கரியு த்ரிஜக$^3$
த்$^3$வடெ$^3$ய பாலிஸோ எனலு தக்ஷண ப$^3$ந்து$^3$ பாலிஸிதெ$^3$ |
மட$^3$தி$^3$மாதனு கேளி ப$^3$லுபரி
ப$^3$ட$^3$வ ப்ராம்ஹண தா$^4$ன்யகொட$^3$லு
பொட$^3$விக$^3$ஸத$^3$ள பா$^4$க்$^3$ய நீடி$^3$தெ$^3$ ஶேஷகி$^3$ரிவாஸா ||10

மடுவினொளகிஹ - அந்த குட்டையில் இருந்ததான; மகரி காலனு பிடிது - முதலையானது, யானையின் காலினை பிடித்து; பாதிஸெ - அதனை துன்புறுத்த; கரியு - அந்த யானையானது; த்ரிஜகத்வடெய பாலிஸோ எனலு - நாராயணா அகில குரோ பகவன் நமஸ்தே என்று வேண்டிக் கொள்ள; தக்ஷண பந்து பாலிஸிதெ - உடனடியாக நீ அங்கு வந்து அதனை காத்தாய்; பலுபரி - பலவிதமான; மடதிமாதனு கேளி - மனைவியின் பேச்சினைக் கேட்டு; படவ பிராமண - ஏழையான குசேல பிராமணன்; தான்ய கொடலு - தான் கொண்டு வந்த அவலைக் கொடுக்க; பொடவியொளு - இந்த பூமியில்; அஸதள பாக்ய - அபாரமான பாக்கியத்தினை (செல்வத்தினை); நீடிதெ - அவனுக்கு நீ கொடுத்தாய்; சேஷகிரிவாஸ - சேஷாசலவாசனே.

அந்த குட்டையில் இருந்ததான முதலையானது, யானையின் காலைப் பிடித்து, அதனை துன்புறுத்த, அந்த யானையானது, நாராயணா அகில குரோ பகவன் நமஸ்தே என்று வேண்டிக் கொள்ள, உடனடியாக நீ அங்கு வந்து அதனை காத்தாய். மனைவியின் பலவிதமான பேச்சினைக் கேட்டு, உன்னை பார்க்க வந்த ஏழையான குசேலன், தான் கொண்டு வந்த அவலைக் கொடுக்க, இந்த பூமியில் அபாரமான பாக்கியத்தை நீ அவனுக்குக் கொடுத்தாய். சேஷாசல வாஸனே.

பிந்தெமாடி$^3$த$^3$ மஹிமெக$^3$ள நா
நெந்து$^3$ வர்ணிஸலேனுப$^2$ல ஶ்ரீ
காந்த என்னனு பொரெயெ கீருதி நினகெ$^3$ ப$^2$லவெனகெ$^3$ |
கந்துஜனகனெ என்ன மனஸின
அந்தரங்க$^3$தி$^3$ நீனெ ஸர்வத$^3$
நிந்து ப்ரேரணெ மாள்பெ ஸர்வத$^3$ ஶேஷகி$^3$ரிவாஸா ||11

பிந்தெமாடித - முன்னர் நீ செய்த; மஹிமெகள - மகிமைகளை; நா நெந்து வர்ணிஸலேனுபல - நான் என்னவென்று சொல்லி வர்ணிப்பது?. அப்படி வர்ணிப்பதால் எனக்கு என்ன பலன்?; ஶ்ரீகாந்த - ஶ்ரீகாந்தனே; என்னனு பொரெயெ கீருதி நினகெ - என்னை காத்த புகழ் உனக்கு; பலவெனகெ - இதுவே எனக்கான பலன்; கந்துஜனகனெ - மன்மதனின் தந்தையே; என்ன மனஸின அந்தரங்கதி - என் மனதில், அந்தரங்கத்தில், பிம்பமூர்த்தியாக; நீனே ஸர்வத நிந்து - நீயே எப்போதும் இருந்தவாறு; ப்ரேரணெ மாள்பெ ஸர்வத - அனைத்தையும் செய்யுமாறு செய்விக்கிறாய்; சேஷகிரிவாஸ - சேஷாசல வாஸனே.

முன்னர் நீ செய்த மகிமைகளை நான் எப்படி வர்ணிப்பேன்?. அப்படி வர்ணிப்பதால் எனக்கு என்ன பலன்?. ஶ்ரீகாந்தனே. என்னை காக்கும் புகழ் உனக்கு வரும். இதுவே எனக்கான பலன். மன்மதனின் தந்தையே, என் மனதில் பிம்பமூர்த்தியாக நீயே எப்போதும் இருந்தவாறு, அனைத்தையும் செய்யுமாறு செய்விக்கிறாய். சேஷாசல வாஸனே.

ஶ்ரீனிவாஸனெ ப$^4$க்தபோஷனெ
ஞானிகுலக$^3$ளிக$^3$ப$^4$ய தா$^3$யக
தீ$^3$னபா$^3$ந்த$^4$வ நீனெ என்னமனத$^3$ர்த்த$^2$ பூரெயிஸொ |
அனுபமோபமஞான ஸம்பத$^3$
வினயபூர்வகவித்து பாலிஸோ
ஜனுமஜனுமகெ மரெயபே$^3$ட$^3$வோ ஶேஷகி$^3$ரிவாஸா ||12

ஶ்ரீனிவாஸனே; பக்தபோஷனெ - பக்தர்களை எப்போதும் காப்பவனே; ஞானிகுலகளிகெ அபயதாயக - ஞானிகளுக்கு எப்போதும் அபயம் அளித்து அருள்பவனே; தீனபாந்தவ நீனெ - உன் பக்தர்களுக்கு நீயே அருள்பவன்; என் மனத அர்த்த பூரயிஸோ - என் மனதின் விருப்பங்களை நிறைவேற்றுவாயாக; அனுபமோபம ஞான - மிகச் சிறந்ததான, உயர்வான ஞான; ஸம்பத - செல்வங்கள்; வினயபூர்வக -

பக்தி, மரியாதைகள் ஆகியவற்றையும்; இத்து பாலிஸோ - கொடுத்து அருள்வாயாக; ஜனுமஜனுமகெ மரெயபேடவோ - எந்தப் பிறவியில் நான் வந்தாலும், நீ என்னை மறந்துவிட வேண்டாம்; சேஷகிரிவாஸ - சேஷாசல வாஸனே.

ஸ்ரீனிவாஸனே, பக்தர்களை எப்போதும் காப்பவனே, ஞானிகளுக்கு எப்போதும் அபயம் அளித்து அருள்பவனே, உன் பக்தர்களுக்கு நீயே அருள்பவன். என் மனதின் விருப்பங்களை நிறைவேற்றுவாயாக. மிகச் சிறந்ததான, உயர்வான ஞானம், செல்வங்கள், பக்தி, மரியாதைகள் ஆகியவற்றையும் கொடுத்து அருள்வாயாக. எந்தப் பிறவியில் நான் வந்தாலும், நீ என்னை மறந்துவிட வேண்டாம், சேஷாசல வாஸனே.

மத$^{3}$வு மத்ஸர லோப$^{4}$ மோஹவு
ஒத$^{3}$க$^{3}$பா$^{3}$ரது$^{3}$ என்ன மனத$^{3}$லி
பது$^{3}$மனாப$^{4}$னெ ஞான ப$^{4}$க்தி விரக்தி நீனித்து |
ஹ்ருதயமத்$^{4}$யதி$^{3}$ நின்ன ரூபவு
வத$^{3}$னத$^{3}$லி தவ நாம மந்த்ரவு
ஸத$^{3}$ய பாலிஸோ பே$^{3}$டி$^{3}$கொம்பெனோ ஶேஷகி$^{3}$ரிவாஸா ||13

மதவு - ஆணவம் ; மத்ஸர - பொறாமை ; லோப - பேராசை ; மோஹவு - மாயை (அறியாமை) ; ஒதகபாரது என்ன மனதலி - என் மனதில் இவை வரவேகூடாது; பதுமனாபனெ - பத்மனாபனே; ஞான பக்தி விரக்தி நீனித்து - ஞான பக்தி வைராக்கியங்களை நீ எனக்கு அருளி; ஹ்ருதயமத்யதி நின்ன ரூபவு - என் இதயத்தில் உன் உருவத்தினை (பிம்பமூர்த்தியை); வதனதலி தவ நாம மந்த்ரவு - என் வதனத்தில் எப்போதும் உன் நாமமே; ஸதய பாலிஸோ - இருக்குமாறு அருள்வாயாக; பேடிகொம்பெனோ - என்று வேண்டிக் கொள்கிறேன்; சேஷகிரிவாஸ - சேஷாசல வாஸனே.

ஆணவம், பொறாமை, பேராசை, மாயை (அறியாமை) ஆகியவை, என் மனதில் இவை வரவேகூடாது. பத்மனாபனே, ஞான, பக்தி, வைராக்கியங்களை நீ எனக்கு அருளி, என் இதயத்தில், உன் உருவத்தையும், (பிம்பமூர்த்தியை) என் வதனத்தில் எப்போதும் உன் நாமமே இருக்குமாறும் அருள்வாயாக, என்று வேண்டிக் கொள்கிறேன், சேஷாசல வாஸனே.

அந்த3னுடி3 புஸியாக3பா3ரது3
ப3ந்த3 பா4க்3யவு ஹோக3பா3ரது3
குந்து3 பா3ரதெ3 நின்ன கருணவு தி3னதி3 வர்த்தி4ஸலி |
நிந்தெ3 மாடு3வ ஜனர ஸங்க3வு
எந்தி3கா3த3ரு தொ3ரெய பா3ரது3
எந்து3 நின்னனு பே3டி3கொம்பெ3னோ ஶேஷகி3ரிவாஸா ||14

அந்தனுடி - நான் கூறிய வாக்குகள்; புஸியாகபாரது - பொய் ஆகி விடக்கூடாது; பந்த பாக்யவு - எனக்கு வந்த செல்வங்கள்; ஹோகபாரது - போய்விடக்கூடாது; குந்து பாரதெ - எவ்வித குறைகளும் இன்றி; நின்ன கருணவு - உன்னுடைய கருணையானது; தினதி வர்த்திஸலி - தினப்படி வளர்ந்து கொண்டே இருக்கட்டும்; நிந்தெ மாடுவ ஜனர ஸங்கவு - மற்றவர்களை எப்போதும் குறை சொல்லும் மக்களின் ஸங்கமானது; எந்திகாதரு தொரெய பாரது - என்றைக்கும் எனக்கு கிடைக்கக் கூடாது; எந்து நின்னய - என்று உன்னையே; பேடிகொம்பெனொ - நான் வேண்டிக் கொள்கிறேன்; சேஷகிரிவாஸ - சேஷாசல வாஸனே.

நான் கூறிய வாக்குகள் பொய் ஆகி விடக்கூடாது. எனக்கு வந்த செல்வங்கள் போய்விடக்கூடாது. எவ்வித குறைகளும் இன்றி, உன்னுடைய கருணையானது, தினப்படி வளர்ந்து கொண்டே இருக்கட்டும். மற்றவர்களை எப்போதும் குறை சொல்லும் மக்களின் ஸங்கமானது, என்றைக்கும் எனக்கு கிடைக்கக் கூடாது, என்று உன்னையே நான் வேண்டிக் கொள்கிறேன், சேஷாசல வாஸனே.

ஏனு பே3ட3லி என்ன தே3வனே
ஸானுராக3தி3 என்ன பாலிஸோ
நானாவித3வித3 ஸௌக்2ய நீடு3 இஹபரங்க3ளலி |
ஶ்ரீனிவாஸனெ நின்ன தாஸகெ3
ஏனுகொரெதில்லெல்லி நோட3லு
நீனெ நிந்தீவித4தி3 பேளிஸு ஶேஷகி3ரிவாஸா ||15

ஏனு பேடலி என்ன தேவனெ - என் தலைவனே, ஸ்வாமியே, நான் உன்னை என்னவென்று கேட்டு வேண்டிக் கொள்ளட்டும்; ஸானுராகதி என்ன பாலிஸோ - கருணையுடன் / வாஞ்சையுடன் என்னை அருள்வாயாக; நானாவிதவித ஸௌக்ய நீடு - பற்பல விதமான

சுகங்களை எனக்கு அருள்வாயாக; இஹபரங்களலி - இந்த உலகிலும், பர உலகிலும்; ஸ்ரீனிவாஸனே; நின்ன தாஸகெ - உன் தாஸனான எனக்கு; ஏனு கொரெதில்லெல்லி நோடலு - எந்த விதத்திலும், எங்கும் குறையே வரக்கூடாது; நீனே நிந்தீவிததி - நீயே இவ்வாறாக இருந்து; பேளிஸு - பார்த்துக் கொள்வாயாக; சேஷாசல வாஸனே.

என் தலைவனே, ஸ்வாமியே, நான் உன்னை என்னவென்று கேட்டு வேண்டிக் கொள்ளட்டும். கருணையுடன் / வாஞ்சையுடன் என்னை அருள்வாயாக. பற்பல விதமான சுகங்களை எனக்கு அருள்வாயாக. இந்த உலகிலும், பர உலகிலும், ஸ்ரீனிவாஸனே, உன் தாஸனான எனக்கு, எந்த விதத்திலும், எங்கும் குறையே வரக்கூடாது. நீயே இவ்வாறாக இருந்து, பார்த்துக் கொள்வாயாக, சேஷாசல வாஸனே.

ஆருமுனித$^{3}$வரேனு மாள்பரோ
ஆருவொலித$^{3}$வரேனு மாள்பரோ
ஆரு ஸ்னேஹிக$^{3}$ராரு த்$^{3}$வேஷிக$^{3}$ளாருதா$^{3}$ஶினரு |
க்ரூர ஜீவர ஹணிது$^{3}$ ஸாத்விக
தீ$^{4}$ர ஜீவர பொரெது$^{3}$ நின்னலி
ஸார ப$^{4}$குதியனித்து பாலிஸோ ஶேஷகி$^{3}$ரிவாஸா ||16

ஆரு முனிதவரேனு மாள்பரோ - கோபம் கொண்டவர்கள் யார், அவர்கள் என்ன செய்தாலும் நான் கண்டு கொள்வதில்லை; ஆரு வொலிதவரேனு மாள்பரோ - யார் எனக்கு நன்மைகள் செய்கிறார்கள் என்பதையும் நான் பார்ப்பதில்லை; யாரு ஸ்னேஹிதரு - யார் என்னுடைய நண்பர்கள்; ஆரு த்வேஷிகளு - யார் என்னுடைய எதிரிகள்; ஆரு தாஷினரு - யார் என்னை உதாசீனம் செய்கிறார்கள் என்றும் கவனிப்பதில்லை; க்ரூர ஜீவர ஹணிது - க்ரூர கெட்டவர்களை அழித்து; ஸாத்விக தீர ஜீவர பொரெது - ஸாத்விகமான தீரரான ஜீவர்களை காத்து; நின்னலி ஸார பகுதியனித்து - உன்னிடம் அபாரமான பக்தியை அளித்து; பாலிஸோ - அருள்வாயாக; சேஷகிரி வாஸனே.

கோபம் கொண்டவர்கள் யாரோ, அவர்கள் என்ன செய்தாலும் நான் கண்டு கொள்வதில்லை. யார் எனக்கு நன்மைகள் செய்கிறார்கள் என்பதையும் நான் பார்ப்பதில்லை. யார் என்னுடைய நண்பர்கள், யார் என்னுடைய எதிரிகள், யார் என்னை உதாசீனம் செய்கிறார்கள்

என்றும் கவனிப்பதில்லை. கெட்டவர்களை அழித்து, ஸாத்விகமான, தீரரான ஜீவர்களை காத்து, உன்னிடம் அபாரமான பக்தியை அளித்து, அருள்வாயாக, சேஷகிரி வாஸனே.

நின்ன ஸேவெயனித்து எனகீ3
நின்ன பத3யுக3 ப4க்தி நீடீ3
நின்ன கு3ண க3ண ஸ்தவன மாடு3வ ஞான நீனித்து |
என்ன மனத3லி நீனே நிந்தூ
க4ன்ன கார்யவ மாடி3 மாடி3ஸு
த4ன்யனெந்தெ3னிஸென்ன லோகதி3 ஶேஷகி3ரிவாஸா ||17

நின்ன ஸேவெயனித்து எனகே - உன்னுடைய சேவையை செய்யவே எனக்கு வாய்ப்பு அளிப்பாயாக; நின்ன பதயுக பக்தி நீடி - உன்னுடைய பதங்களின் பக்தியைக் கொடுத்து; நின்ன குண கண - உன்னுடைய நற்குணங்களை; ஸ்தவன மாடுவ - எப்போதும் போற்றிப் பாடும்படியான; ஞான நீனித்து - ஞானத்தை எனக்குக் கொடுத்து; என்ன மனதலி - என்னுடைய மனதில்; நீனே நிந்து - நீயே நின்றவாறு; கன்ன கார்யவ மாடி மாடிஸு - மிகச் சிறந்த செயல்களை செய்து, செய்விப்பாயாக; தன்யனெந்தெனிஸென்ன லோகதி - என்னை இந்தப் பிறவியை எடுத்ததற்கு தன்யன் என்று நினைக்கச் செய்வாயாக; சேஷகிரி வாஸனே.

உன்னுடைய சேவையை செய்யவே எனக்கு வாய்ப்பு அளிப்பாயாக. உன்னுடைய பதங்களின் பக்தியைக் கொடுத்து, உன்னுடைய நற்குணங்களை எப்போதும் போற்றிப் பாடும்படியான ஞானத்தை எனக்குக் கொடுத்து, என்னுடைய மனதில் நீயே நின்றவாறு, மிகச் சிறந்த செயல்களை செய்து, செய்விப்பாயாக. என்னை இந்தப் பிறவியை எடுத்ததற்கு தன்யன் என்று நினைக்கச் செய்வாயாக, சேஷகிரி வாஸனே.

ஜயஜயது ஷட2 கூர்ம ரூபனெ
ஜயஜயது கிடி ஸிம்ஹ வாமன
ஜயஜயது ப்4ருகு3ராம ரகு4குல ஸோம ஶ்ரீராம |
ஜயஜயது ஶிரி யது3வரேண்யனெ
ஜயஜயது ஜனமோஹ பு3த்3த3னெ
ஜயஜயது கலிகல்மஷக்4னனெ கல்கி நாமகனெ|| 18

ஜய ஜயது - மங்களம் உண்டாகட்டும்; ஷட கூர்ம ரூபனே - மத்ஸ்ய கூர்மனே; கிடி ஸிம்ஹ வாமன - வராஹ, ஸிம்ம, வாமன ரூபங்களே; ப்ருகுராம - பரசுராமனே; ரகுகுல ஸோம ஸ்ரீராம - ரகு குலத்தில் உதித்தவனான ஸ்ரீராமனே; ஷிரி யதுவரேண்யனெ - யது குலத்தில் பிறந்தவனான ஸ்ரீகிருஷ்ணனே; ஜனமோஹக புத்தனே - மக்களை மயக்கியவனான புத்தனே; கலிகல்மஷக்னனே - கலியை அழிக்க வந்தவனே; கல்கி நாமகனே - கல்கி நாமகனான ஸ்ரீஹரியே, உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

மத்ஸ்ய கூர்மனே, வராஹ, ஸிம்ம, வாமன ரூபங்களே, பரசுராமனே, ரகு குலத்தில் உதித்தவனான ஸ்ரீராமனே, யது குலத்தில் பிறந்தவனான ஸ்ரீகிருஷ்ணனே, மக்களை மயக்கியவனான புத்தனே, கலியை அழிக்க வந்தவனே, கல்கி நாமகனான ஸ்ரீஹரியே, உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

கருண ஸாக$^{3}$ர நீனெ நிஜபத$^{3}$
ஶரணவத்ஸல நீனே ஶாஶ்வத
ஶரணஜன மந்தா$^{3}$ர கமலாகாந்த ஜயவந்த |
நிருத நின்னனு நுதிஸி பே$^{3}$டு$^{3}$வெ
வரத$^{3}$ கு$^{3}$ருஜக$^{3}$ன்னாத$^{2}$ விட்டல
பரம ப்ரேமதி$^{3}$ பொரெயோ என்னனு ஶேஷகி$^{3}$ரிவாஸா ||19

கருண ஸாகர நீனே - கருணைக்கடல் நீயே; நிஜபத ஷரணவத்ஸல - உன்னுடைய பதங்களை வணங்கியவர்களை காப்பவனே; ஷாஷ்வத - நிரந்தரமானவனே; ஷரணஜன மந்தார - உன் பாதங்களை வணங்குபவர்களை காப்பவனே; கமலாகாந்த ஜயவந்த - ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே; அனைத்திலும் வெற்றி பெறுபவனே; நிருத நின்னனு - எப்போதும் உன்னை; நுதிஸி பாடுவே - போற்றிப் பாடுவேன்; வரத குரு ஜகன்னாத விட்டல - வரமளிப்பவனான குரு ஜகன்னாத விட்டலனே; பரம ப்ரேமதி பொரெயோ - மிகுந்த அன்புடன் என்னை காப்பாயாக; என்னனு சேஷகிரிவாஸ - சேஷாசல வாஸனே, என்னை காப்பாயாக.

கருணைக்கடலே, உன்னுடைய பதங்களை வணங்கியவர்களை காப்பவனே, நிரந்தரமானவனே, உன் பாதங்களை வணங்குபவர்களை காப்பவனே, ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே, எப்போதும் உன்னை

போற்றிப் பாடுவேன். வரமளிப்பவனான குரு ஜகன்னாத விட்டலனே, மிகுந்த அன்புடன் என்னை காப்பாயாக, சேஷாசல வாஸனே, என்னை காப்பாயாக.

***

**ஸ்ரீகுருப்யோ நம:**

## ஸ்ரீலட்சுமி ஸ்தவராஜா

### ஸ்ரீகுருஜகன்னாததாஸர் இயற்றியது
### (மூலம் மட்டும் - பாராயணத்திற்காக)

ஹரியரஸி ஸிரி நீனே ஸர்வத3
ஹரிய வக்ஷஸ்தல நிவாஸினி
ஹரிய த3க்ஷிண தொடெ3யொளொப்புத காலதே3மத3லி
ஹரிய ஸஹிததி3 ஹர்யனுக்3ஞதி3
ஹரிய ஸேவா நிருதகெ3ய்யுத
ஹரிய பத3க்கெ நீடி3 ஸுகி2ஸுவ ஸிரியெ வந்தி3பெனு ||1

ஹரிய கருணதி3 ஸரஸிஜாண்ட3வ
ஹரிய ஸஹிததி3 ஹரிய தெரத3லி
ஹரிய மனக1தி1 ப்ரீதிகோ3ஸுக3 ஸ்ருஷ்டிஸ்தி2தி லயவ
ஹரிய சித்தனுகூலமாடு3த
ஹரிய ஸங்கல்பானுஸாரதி3
ஹரியனுக்3ரஹ படெ3த3 நின்னனு ஸ்துதிபெனனவரத ||2

ஹரிய ரமணியெ ஹரிய ஞானவ
ஹரிய பத3யுக3 ப4க்தி பாலிஸி
ஹரிய ஸஹிததி3 நின்ன ரூபவ என்ன மனத3ல்லி
ஹரிய வல்லபெ4 தோரெ ஸந்தத
ஹரிய மன ஸங்கல்பத3ந்தே
ஹரிய மூருதி நெனஹனித்து பொரெயெ மஜ்ஜனனீ ||3

ஹரிய ஹ்ருத3யத3லித்த தெரத3லி
ஶிரியெ என்னய ஸத3ன மத்4யதி3
ஹரிய ஸஹிததி3 நீனெ நெலஸீ ஸர்வகாலத3லி
ஹரிய நின்னய ஸேவெ கோ3ஸுக3
பரம நின்ன விபூ4தி ஸஹிததி3
ஹரி விபூ4திஜ ஸகல பா4க்3யவனித்து பொரெயென்ன ||4

ஹரிய மானினி ஸகல ஸம்பத3
ஹரிய ப்ரேமதி3யித்து நீனே
ஹரிய ஸேவெய கெ3ய்ஸி என்னனு பொரெயெ மஜ்ஜனனி |
ஹரிய ஸஹிததி3 நீனெ ஸந்தத
பெ3ரெது மனெயலி ஸ்வர்ண வ்ருஷ்டிய
கரெது3 பா4க்3யவனித்து என்னனு பொரெயெ ஶிரிதே3வி ||5

ஹரிய ஸஹ வைகுண்ட2லோகதி3
இருவ தெரத3லி என்ன ஸத3னதி3
ஹரிய ஸஹிதத3லித்3து3 மங்க3ள கார்ய தி3னதி3னதி3
ஹரிய தத்வவிசார நின்னய
ஹரிய மஹிமெயனருஹி ஸந்தத
ஹரிய ப4க்தரஸங்க3த3லி ஹரிதா3ஸனெனிஸென்ன ||6

ஹரியு ஜனகனு ஜனனி நீனே
ஶிரியனித்து பாலிஸெந்தெ3னு
ஹரிய மந்தி3ரவெனிப என்னய ஹ்ருத3ய மத்4யத3லி |
ஹரிய கூட்3யனுதி3னதி3 நின்னய
ஹரிய ரூபவ தோரி பா4க்3யவ
கரதி3 நீடி3 பரியலென்னனு பொரெயெ ஶிரிதே3வி ||7

ஹரிய பத3ஸஞ்சாதவாதா3
த4ரணீமண்ட3ல ஶிரியெ நினகே3
அரஸனாகி3ஹ ஹரியகூடி3 நிதி4ய நீட3ம்ம |
ஹரிய கருணதி3 பா4க்3ய நீடு3வ
பரம ஶகுதியு நினகெ3 இருவுது3
கருணதி3ந்த3லி நோடி3 பா4க்3யவனித்து பொரெயம்ம ||8

ஹரிகெ3 அரஸீ எனிப நின்னனு
ஸரஸிஜாஸன ருத்ரஶக்ரரு
பரம ப4குதி ஞான பூர்வக ப4ஜிஸி நிஜக3திய
த்வரதி3 ஸேரித3 ஶ்ருதியவார்த்தெய
கரணதி3ந்த3ரிதீக3 நின்னய
சரணகமலவ மனதி3ஸந்தத ப4ஜிபெ கல்யாணி ||9

மாத4வன மனப்ரேம மானினி
ஸாத3ரதி3 ஸௌபா4க்3ய த4னக3ள
யாத3வேஶ ஸுதா4மத்3விஜவரகி3த்த தெரத3ந்தெ
மோத3 மனத3லி ஸாந்த்3ர ஸுக2மய
போ3த4ப4குதி விரகுதி பாலிஸி
வேத3க3ம்யன ப4ஜனெ மாடி3ஸு வேத3கபி4மானி ||10

உதி3தபா4ஸ்கர கோடிபா4ஸளெ
பி3து3ரமண்ட3ல ஜைப வத3னெயெ
மத3னமூருதி கோடினிப4 லாவண்யபூரிதளே
பது3ம நயனளே நாஸ சம்பக
பி4து3ரப2லக1 ஸுபா2ல குந்தள
மத3னகார்முக புப்3பு3யுக3ளவு கருணயுக3 ஶோபெ4 ||11

கத3பு கன்னடி3 குமுத3 குட்மல
ரத3னபங்க்தியு ரக்த ஓஷ்டவு
சதுரெயானன மந்த3ஹாஸவு சந்த்ரசந்த்3ரிகெயு
உத3ய தாம்ரலலாட ஶோபி4தெ
ஒத3கி3 ராஜிப ப்4ருங்க3குந்தளெ
உத3க பி3ந்து3க3ளெம்போ3 பைதலெ முத்து ராஜிதளெ ||12

முத்3து3 சுப3கவு கம்பு3 கந்த4ர
பொத்3து3கொண்டி3ஹ பா3ஹுத்3வந்த்3வவு
எத்3து3 தோருத கரிய கரதெர தாவெ ஶோபி4பவு
முத்3ர ரத்னாங்கு3ளிய ஸங்க4தி3
போதி3த3 ஹஸ்தத்வயவு ஶோபி4ப
பத்3மகட்மக3ளெனிஸி ஸேவகக3ப4ய நீடு3வவு ||13

ப4க்தஜனததி ப்ரேமவாரிதெ4
ப4க்தஜன ஹ்ருத் பத்3மவாஸினி
ப4க்தஜனதா3ரித்3ர்ய ஹாரியெ நமிபெ நனவரத
லகுமி க்ரமுக ஸுகண்ட2த3லி ஸ்ரீ
ரேக2 ஶோபி4தெ நித்ய நித்யதி3
முகுத ஹாராவளி ஸுஶோபி4தெ பரமமங்க3ளளெ ||14

நின்னதா3ஸன மாடெ3 லகுமியெ
க4ன்னதர ஸௌபா4க்3ய ஸம்பத3
சென்னவாகி3 நீடி3 என்னய ஸத3னதொ3ளகி3த்து3
நின்ன பதியொட3கூ3டி3 தி3னதி3ன
என்ன கையலி பூஜெ கொ3ள்ளுத
நின்ன ரூபவ தோரி பாலிஸு பால ஸாக3ரஜெ ||15

மாதெ நின்னய ஜடர கமல ஸு
ஜாதனாகி3ஹ ஸுதன தெரத3லி
ப்ரீதிபூர்வக பா4க்3ய நிதி4க3ளனித்து நித்யத3லி
நீத ப4குதி ஞான பூர்வக
தா3த கு3ரு ஜக3ன்னாத2 விட்டலன
ப்ரீதிகொ3ளிஸுவ பா4க்3ய பாலிஸி பொரெயெ நீயென்ன ||16

***

**ஸ்ரீகுருப்யோ நம:**

## ஸ்ரீகுருஜகன்னாததாஸர் இயற்றிய
## ஸ்ரீலட்சுமி ஸ்தவராஜா
## (தமிழில் - அர்த்த விளக்கங்களுடன்)

ஹரியரஸி ஸிரி நீனே ஸர்வத$^{3}$
ஹரிய வக்ஷஸ்தல நிவாஸினி
ஹரிய த$^{3}$க்ஷிண தொடெ$^{3}$யொளொப்புத காலதே$^{3}$ஶத$^{3}$லி
ஹரிய ஸஹிததி$^{3}$ ஹர்யனுக்$^{3}$ஞதி$^{3}$
ஹரிய ஸேவா நிருதகெ$^{3}$ய்யுத
ஹரிய பத$^{3}$க்கெ நீடி$^{3}$ ஸுகி$^{2}$ஸுவ ஶிரியெ வந்தி$^{3}$பெனு ||1

ஹரியரஸி ஸிரி நீனே ஸர்வத - ஸ்ரீஹரியின் நியத பத்னியான ஸ்ரீ நீயே; ஹரிய வக்ஷஸ்தல நிவாஸினி - ஸ்ரீஹரியின் மார்பில் வசிப்பவளே; ஹரிய தக்ஷிண தொடெயொளுப்புத காலதேஷதலி - அனைத்து கால, தேசங்களிலும், ஸ்ரீஹரியின் இடது தொடையின் மேல் அமர்ந்திருப்பவளே; ஹரிய ஸஹிததி - எப்போதும் ஸ்ரீஹரியுடனேயே இருந்து (அவனை விட்டுப் பிரியாமல்); ஹர்யனுக்ஞதி - ஸ்ரீஹரியின் ஆணைப்படியே; ஹரிய ஸேவா நிருதகெய்யுத - எப்போதும் ஸ்ரீஹரியின் சேவையையே செய்தவாறு; ஹரிய பதகெ நீடி ஸுகிஸுவ - ஸ்ரீஹரியின் பாதங்களிலேயே அந்த ஸேவையை சமர்ப்பித்தவாறு, மகிழ்ச்சியடையும்; ஷிரியே வந்திபெனு - ஸ்ரீலட்சுமிதேவியே உன்னை நான் வணங்குகிறேன்.

ஸ்ரீஹரியின் நியத பத்னியான ஸ்ரீ நீயே. ஸ்ரீஹரியின் மார்பில் வசிப்பவளே, அனைத்து கால, தேசங்களிலும், ஸ்ரீஹரியின் இடது தொடையின் மேல் அமர்ந்திருப்பவளே; எப்போதும் ஸ்ரீஹரியுடனேயே இருந்து (அவனை விட்டுப் பிரியாமல்), ஸ்ரீஹரியின் ஆணைப்படியே, எப்போதும் ஸ்ரீஹரியின் சேவையையே செய்தவாறு, ஸ்ரீஹரியின் பாதங்களிலேயே அந்த ஸேவையை சமர்ப்பித்தவாறு, மகிழ்ச்சியடையும் ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னை நான் வணங்குகிறேன்.

ஹரிய கருணதி[3] ஸரஸிஜாண்ட[3]வ
ஹரிய ஸஹிததி[3] ஹரிய தெரத[3]லி
ஹரிய மனக[1]தி[1] ப்ரீதிகோ[3]ஸுக[3] ஸ்ருஷ்டிஸ்தி[2]தி லயவ
ஹரிய சித்தனுகூலமாடு[3]த
ஹரிய ஸங்கல்பானுஸாரதி[3]
ஹரியனுக்[3]ரஹ படெ[3]த[3] நின்னனு ஸ்துதிபெனனவரத ||2

ஹரிய கருணதி - ஸ்ரீஹரியின் கருணையாலேயே; ஸரஸிஜாண்டவ - இந்த பிரம்மாண்டத்தினை; ஹரிய ஸஹிததி - ஸ்ரீஹரியுடனேயே சேர்ந்து; ஹரிய தெரதலி - ஸ்ரீஹரி கூறியபடி (அவன் செய்வதைப் போலவே); ஹரிய மனகதி ப்ரீதிகோஸுக - ஸ்ரீஹரியின் மனம் மிகவும் மகிழ்ச்சி அடையும்படியாக; ஸ்ருஷ்டிஸ்திதி லயவ - ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகிய செயல்களை; ஹரிய சித்தனுகூலமாடுத - ஸ்ரீஹரியின் சித்தத்திற்கு அனுகூலமாக செய்தவாறு; ஹரிய ஸங்கல்பானுஸாரதி - ஸ்ரீஹரி தான் செய்த சங்கல்பத்தை நிறைவேற்றும்படியாக; ஹரியனுக்ரஹ படெத - ஸ்ரீஹரியின் அருளைப் பெற்றவளான; நின்னனு - ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னை; ஸ்துதிபெனனவரத - எப்போதும் நான் வணங்குகிறேன்.

ஸ்ரீஹரியின் கருணையாலேயே, இந்த பிரம்மாண்டத்தினை, ஸ்ரீஹரியுடனேயே சேர்ந்து, ஸ்ரீஹரி கூறியபடி (அவன் செய்வதைப் போலவே), ஸ்ரீஹரியின் மனம் மிகவும் மகிழ்ச்சி அடையும்படியாக, ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய ஆகிய செயல்களை, ஸ்ரீஹரியின் சித்தத்திற்கு அனுகூலமாக செய்தவாறு, ஸ்ரீஹரி தான் செய்த சங்கல்பத்தை நிறைவேற்றும்படியாக, ஸ்ரீஹரியின் அருளைப் பெற்றவளான ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னை, எப்போதும் நான் வணங்குகிறேன்.

ஹரிய ரமணியெ ஹரிய ஞானவ
ஹரிய பத[3]யுக[3] ப[4]க்தி பாலிஸி
ஹரிய ஸஹிததி[3] நின்ன ரூபவ என்ன மனத[3]ல்லி
ஹரிய வல்லபெ[4] தோரெ ஸந்தத
ஹரிய மன ஸங்கல்பத[3]ந்தே
ஹரிய மூருதி நெனஹனித்து பொரெயெ மஜ்ஜனனீ ||3

ஹரிய ரமணியெ - ஸ்ரீஹரியின் மனைவியே; ஹரிய ஞானவ - ஸ்ரீஹரியின் ஞானத்தை (மற்றும்); ஹரிய பதயுக - ஸ்ரீஹரியின்

பாதங்களைப் பற்றியதான; பக்தி பாலிஸி - பக்தியை (எனக்கு) அருளியவாறு; ஹரிய ஸஹிததி - ஸ்ரீஹரி உடன்; நின்ன ரூபவ என்ன மனதல்லி - உன் ரூபத்தையும் என்னுடைய மனதில்; ஹரிய வல்லபெ தோரெ ஸந்தத - எப்போதும் காட்டுவாயாக, லட்சுமிதேவியே; ஹரிய மன ஸங்கல்பதந்தெ - ஸ்ரீஹரி செய்த சங்கல்பத்திற்கேற்ப; ஹரிய மூருதி நெனஹனித்து - ஸ்ரீஹரியின் பிம்பமூர்த்தியை எனக்கு தரிசனம் அளித்து; பொரெயெ மஜ்ஜனனி - என்னை அருள்வாயாக, என் தாயே.

ஸ்ரீஹரியின் மனைவியே, ஸ்ரீஹரியின் ஞானத்தை (மற்றும்), ஸ்ரீஹரியின் பாதங்களைப் பற்றியதான பக்தியை (எனக்கு) அருளியவாறு, ஸ்ரீஹரி உடன், உன் ரூபத்தையும் என்னுடைய மனதில் எப்போதும் காட்டுவாயாக, லட்சுமிதேவியே. ஸ்ரீஹரி செய்த சங்கல்பத்திற்கேற்ப, ஸ்ரீஹரியின் பிம்பமூர்த்தியை எனக்கு தரிசனம் அளித்து, என்னை அருள்வாயாக, என் தாயே.

ஹரிய ஹ்ருத$^3$யத$^3$லித்த தெரத$^3$லி
ஶிரியெ என்னய ஸத$^3$ன மத்$^4$யதி$^3$
ஹரிய ஸஹிததி$^3$ நீனெ நெலஸீ ஸர்வகாலத$^3$லி
ஹரிய நின்னய ஸேவெ கோ$^3$ஸுக$^3$
பரம நின்ன விபூ$^4$தி ஸஹிததி$^3$
ஹரி விபூ$^4$திஜ ஸகல பா$^4$க்$^3$யவனித்து பொரெயென்ன ||4

ஹரிய ஹ்ருதயதலித்த தெரதலி - எப்படி நீ ஸ்ரீஹரியின் மார்பில் வசிக்கிறாயோ, அதைப் போலவே; ஷிரியே - ஸ்ரீலட்சுமிதேவியே; என்னய ஸதன மத்யதி - என்னுடைய வீட்டில் (மனதில்); ஹரிய ஸஹிததி - ஸ்ரீஹரியுடன்; நீனே நெலஸி ஸர்வகாலதலி - எப்போதும் நிலைத்திருந்து; ஹரிய நின்னய ஸேவெ கோஸுக - ஸ்ரீஹரிக்கு சேவை செய்வதற்காக; பரம நின்ன விபூதி ஸஹிததி - உன்னுடைய சிறப்பான ரூபத்துடன்; ஹரி விபூதிஜ - ஸ்ரீஹரியின் சிறப்பான; ஸகல பாக்யவனித்து பொரெயென்ன - அனைத்து பாக்கியங்களையும் கொடுத்து, என்னை காப்பாயாக.

எப்படி நீ ஸ்ரீஹரியின் மார்பில் வசிக்கிறாயோ, அதைப் போலவே, ஹே ஸ்ரீலட்சுமி தேவியே, என்னுடைய வீட்டில் (மனதில்), ஸ்ரீஹரியுடன் எப்போதும் நிலைத்திருந்து, ஸ்ரீஹரிக்கு சேவை செய்வதற்காக,

உன்னுடைய சிறப்பான ரூபத்துடன், ஸ்ரீஹரியின் சிறப்பான அனைத்து பாக்கியங்களையும் கொடுத்து, என்னை காப்பாயாக.

ஹரிய மானினி ஸகல ஸம்பத3
ஹரிய ப்ரேமதி3யித்து நீனே
ஹரிய ஸேவெய கெ3ய்ஸி என்னனு பொரெயெ மஜ்ஜனனி |
ஹரிய ஸஹிததி3 நீனெ ஸந்தத
பெ3ரெது மனெயலி ஸ்வர்ண வ்ருஷ்டிய
கரெது3 பா4க்3யவனித்து என்னனு பொரெயெ ஶிரிதே3வி ||5

ஹரிய மானினி - ஸ்ரீஹரியின் இல்லத்தரசியே; ஸகல ஸம்பத - அனைத்து செல்வங்களையும் கொண்டவளே; ஹரிய ப்ரேமதியித்து - ஸ்ரீஹரியின் மேல் எனக்கு பக்தியை கொடுத்து; நீனே ஹரிய ஸேவெய கெய்ஸி - ஸ்ரீஹரியின் சேவையினை என் மூலம் செய்வித்து; என்னனு பொரெயெ மஜ்ஜனனி - என் தாயே, எனக்கு அருள்வாயாக; ஹரிய ஸஹிததி - ஸ்ரீஹரி உடன்; மனெயலி ஸந்தத நீயே பெரெது - நீயே என் வீட்டில் எப்போதும் நிலைத்திருந்து; ஸ்வர்ணவ்ருஷ்டிய கரெது - தங்க மழையை பெய்வித்து; பாக்யவனித்து - அனைத்து பாக்கியங்களையும் எனக்கு அளித்து; என்னனு பொரெயெ ஷிரிதேவி - ஸ்ரீதேவியே, என்னை அருள்வாயாக.

ஸ்ரீஹரியின் இல்லத்தரசியே, அனைத்து செல்வங்களையும் கொண்டவளே, ஸ்ரீஹரியின் மேல் எனக்கு பக்தியை கொடுத்து, ஸ்ரீஹரியின் சேவையினை என் மூலம் செய்வித்து, என் தாயே, எனக்கு அருள்வாயாக. ஸ்ரீஹரி உடன் நீயே என் வீட்டில் எப்போதும் நிலைத்திருந்து, தங்க மழையை பெய்வித்து, அனைத்து பாக்கியங்களையும் எனக்கு அளித்து, ஸ்ரீதேவியே, என்னை அருள்வாயாக.

ஹரிய ஸஹ வைகுண்ட2லோகதி3
இருவ தெரத3லி என்ன ஸத3னதி3
ஹரிய ஸஹிதத3லித்3து3 மங்க3ள கார்ய தி3னதி3னதி3
ஹரிய தத்வவிசார நின்னய
ஹரிய மஹிமெயனருஹி ஸந்தத
ஹரிய ப4க்தரஸங்க3த3லி ஹரிதா3ஸனெனிஸென்ன ||6

ஹரிய ஸஹ வைகுண்ட லோகதி - ஸ்ரீஹரியுடன் நீ எப்போதும் வைகுண்டத்தில்; இருவ தெரதலி - இருப்பதைப் போல; என்ன ஸதனதி - என் வீட்டிலும்; ஹரிய ஸஹிததலித்து - ஸ்ரீஹரி உடனேயே எப்போதும் இருந்து; தினதினதி மங்கள கார்ய - தினம்தோறும் பல விதமான மங்கள காரியங்களையும்; ஹரிய தத்வவிசார - ஸ்ரீஹரியின் தத்வத்தைப் பற்றியும்; நின்னய, ஹரிய மஹிமெயனருஹி - உன்னுடைய மற்றும் ஸ்ரீஹரியின் மகிமைகளையும் விளக்கி; ஸந்தத - எப்போதும்; ஹரிய பக்தரஸங்கதலி - ஸ்ரீஹரியின் பக்தர்களின் ஸங்கத்தில்; ஹரிதாஸனெனிஸென்ன - என்னை இருக்கச் செய்து, என்னை ஹரிதாஸன் என்று ஆக்குவாயாக.

ஸ்ரீஹரியுடன் நீ எப்போதும் வைகுண்டத்தில் இருப்பதைப் போல, என் வீட்டிலும், ஸ்ரீஹரி உடனேயே எப்போதும் இருந்து, தினம்தோறும் பல விதமான மங்கள காரியங்களையும், ஸ்ரீஹரியின் தத்வத்தைப் பற்றியும், உன்னுடைய மற்றும் ஸ்ரீஹரியின் மகிமைகளையும் விளக்கி, எப்போதும், ஸ்ரீஹரியின் பக்தர்களின் ஸங்கத்தில் என்னை இருக்கச் செய்து, என்னை ஹரிதாஸன் என்று ஆக்குவாயாக.

ஹரியு ஜனகனு ஜனனி நீனே
ஶிரியனித்து பாலிஸெந்தெ$^{3}$னு
ஹரிய மந்தி$^{3}$ரவெனிப என்னய ஹ்ருத$^{3}$ய மத்$^{4}$யத$^{3}$லி |
ஹரிய கூட்$^{3}$யனுதி$^{3}$னதி$^{3}$ நின்னய
ஹரிய ரூபவ தோரி பா$^{4}$க்$^{3}$யவ
கரதி$^{3}$ நீடி$^{3}$ பரியலென்னனு பொரெயெ ஶிரிதே$^{3}$வி ||7

ஹரியு ஜனகனு ஜனனி நீனே - ஸ்ரீஹரியே என் தந்தை. நீயே என் தாய்; ஷிரியனித்து பாலிஸெந்தெனு - எனக்கு தக்க செல்வங்களை அருளி, காப்பாயாக; ஹரிய மந்திரவெனிப - ஸ்ரீஹரியின் இருப்பிடம் எனப்படுவதான; என்னய ஹ்ருதய மத்யதலி - என்னுடைய இதயத்தில்; ஹரிய கூட்யனுதினதி - ஸ்ரீஹரியுடன் தினம்தோறும்; நின்னய, ஹரிய ரூபவ தோரி - உன்னுடைய மற்றும் ஸ்ரீஹரியின் ரூபத்தைக் காட்டி; பாக்யவ கரதி நீடி - அனைத்து பாக்கியங்களையும் எனக்கு அருளி; ஈ பரியலென்னனு - இவ்வாறாக; பொரெயெ ஷிரிதேவி - என்னை அருள்வாயாக, ஸ்ரீதேவியே.

ஸ்ரீஹரியே என் தந்தை. நீயே என் தாய். எனக்கு தக்க செல்வங்களை அருளி, காப்பாயாக. ஸ்ரீஹரியின் இருப்பிடம் எனப்படுவதான, என்னுடைய இதயத்தில், ஸ்ரீஹரியுடன் தினம்தோறும், உன்னுடைய மற்றும் ஸ்ரீஹரியின் ரூபத்தைக் காட்டி, அனைத்து பாக்கியங்களையும் எனக்கு அருளி, இவ்வாறாக; என்னை அருள்வாயாக, ஸ்ரீதேவியே.

ஹரிய பத$^{3}$ஸஞ்சாதவாதா$^{3}$
த$^{4}$ரணீமண்ட$^{3}$ல ஶிரியெ நினகே$^{3}$
அரஸனாகி$^{3}$ஹ ஹரியகூடி$^{3}$ நிதி$^{4}$ய நீட$^{3}$ம்ம |
ஹரிய கருணதி$^{3}$ பா$^{4}$க்$^{3}$ய நீடு$^{3}$வ
பரம ஶகுதியு நினகெ$^{3}$ இருவுது$^{3}$
கருணதி$^{3}$ந்த$^{3}$லி நோடி$^{3}$ பா$^{4}$க்$^{3}$யவனித்து பொரெயம்ம ||8

ஹரிய பதஸஞ்சாதவாதா - ஸ்ரீஹரியின் பாதங்களில் வணங்குபவளான; தரணீ மண்டல ஷிரியெ - பூதேவியே, ஸ்ரீலட்சுமிதேவியே; அரஸனாகிஹ ஹரியகூடி - உன் தலைவனான ஸ்ரீஹரியுடன் சேர்ந்து; நிதிய நீடம்ம - செல்வத்தை அருள்வாயாக;
ஹரிய கருணதி பாக்ய நீடுவ - ஸ்ரீஹரியின் அருளாலேயே நீ உன் பக்தர்களுக்கு அருளும்; பரம ஷகுதியு நினகெ இருவுது - சக்தி உனக்கு இருக்கிறது; கருணதிந்தலி நோடி - என்னை கருணையுடன் பார்த்து; பாக்யவனித்து பொரெயம்ம - என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி, அருள்வாயாக.

ஸ்ரீஹரியின் பாதங்களில் வணங்குபவளான பூதேவியே, ஸ்ரீலட்சுமிதேவியே, உன் தலைவனான ஸ்ரீஹரியுடன் சேர்ந்து, செல்வத்தை அருள்வாயாக. ஸ்ரீஹரியின் அருளாலேயே, உன் பக்தர்களுக்கு அருளும் சக்தி உனக்கு இருக்கிறது. என்னை கருணையுடன் பார்த்து, என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி, அருள்வாயாக.

ஹரிகெ$^{3}$ அரஸீ எனிப நின்னனு
ஸரஸிஜாஸன ருத்ரஶக்ரரு
பரம ப$^{4}$குதி ஞான பூர்வக ப$^{4}$ஜிஸி நிஜக$^{3}$திய
த்வரதி$^{3}$ ஸேரித$^{3}$ ஶ்ருதியவார்த்தெய
கரணதி$^{3}$ந்த$^{3}$ரிதீக$^{3}$ நின்னய
சரணகமலவ மனதி$^{3}$ஸந்தத ப$^{4}$ஜிபெ கல்யாணி ||9

ஹரிகெ அரஸீ எனிப நின்னனு - ஸ்ரீஹரியின் நியத பத்னி எனப்படும் உன்னை; ஸரஸிஜாஸன - தாமரையில் அமர்ந்திருப்பவரான பிரம்மதேவர்; ருத்ரஷக்ரரு - ருத்ர, இந்திரர்கள், ஆகியோர்; பரம பகுதி ஞான பூர்வக பஜிஸி - யதார்த்த ஞான, பக்தி உடனாக பூஜித்து; நிஜகதிய த்வரதி ஸேரித - அவர்கள் மோட்சத்தை அடைந்தார்கள் என்னும்; ஷ்ருதிவார்த்தெய - ஸ்ருதி வாக்கியத்தை; கரணதிந்தரீதிக - என்னுடைய ஞான இந்திரியங்களால் அறிந்து; நின்னய சரணகமலவ - உன்னுடைய சரண கமலங்களை; மனதி ஸந்தத பஜிபெ கல்யாணி - ஹே கல்யாணியே, என் மனதில் எப்போதும் வணங்கிக் கொண்டிருப்பேன்.

ஸ்ரீஹரியின் நியத பத்னி எனப்படும் உன்னை, தாமரையில் அமர்ந்திருப்பவரான பிரம்மதேவர், ருத்ர, இந்திரர்கள், ஆகியோர், யதார்த்த ஞான, பக்தி உடனாக பூஜித்து, அவர்கள் மோட்சத்தை அடைந்தார்கள் என்னும் ஸ்ருதி வாக்கியத்தை, என்னுடைய ஞான இந்திரியங்களால் அறிந்து, ஹே கல்யாணியே, உன்னுடைய சரண கமலங்களை என் மனதில் எப்போதும் வணங்கிக் கொண்டிருப்பேன்.

மாத4வன மனப்ரேம மானினி
ஸாத3ரதி3 ஸௌபா4க்3ய த4னக3ள
யாத3வேஶ ஸுதா4மத்3விஜவரகி3த்த தெரத3ந்தெ
மோத3 மனத3லி ஸாந்த்3ர ஸுக2மய
போ3த4ப4குதி விரகுதி பாலிஸி
வேத3க3ம்யன ப4ஜனெ மாடி3ஸு வேத3கபி4மானி ||10

மாதவன மனப்ரேம மானினி - பகவந்தனின் மனதுக்கு உகந்தவளான ஸ்ரீலட்சுமிதேவியே; ஸௌபாக்ய தனகள - உன்னுடைய அருட் செல்வங்களை; ஸாதரதி - மிகவும் பக்தி, மரியாதைகளுடன்; யாதவேஷ - யாதவர்களின் தலைவனான ஸ்ரீகிருஷ்ணன்; ஸுதாம த்விஜவரகித்த தெரதந்தெ - தன் நண்பனான ஸுதாமனுக்கு அருளியதைப் போல; ஸாந்த்ர ஸுகமய - அபாரமான, ஸுகமயமான; போதபகுதி விரகுதி - ஞான, பக்தி, விரக்தி; பாலிஸி - ஆகியவற்றை அருளி; வேதகம்யன பஜனெ மாடிஸு - வேதங்களால் போற்றப்படுபவனான பகவந்தனின் பஜனையை செய்விப்பாயாக; வேதகபிமானி - வேதங்களுக்கு அபிமானினியான ஸ்ரீலட்சுமிதேவியே.

பகவந்தனின் மனதுக்கு உகந்தவளான ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னுடைய அருட் செல்வங்களை, மிகவும் பக்தி, மரியாதைகளுடன், யாதவர்களின் தலைவனான ஸ்ரீகிருஷ்ணன், தன் நண்பனான ஸுதாமனுக்கு அருளியதைப் போல, அபாரமான, ஸுகமயமான, ஞான, பக்தி, விரக்தி ஆகியவற்றை அருளி, வேதங்களால் போற்றப்படுபவனான பகவந்தனின் பஜனையை செய்விப்பாயாக. ஹே வேதங்களுக்கு அபிமானினியான ஸ்ரீலட்சுமிதேவியே.

உதி$^{3}$தபா$^{4}$ஸ்கர கோடிபா$^{4}$ஸளெ
பி$^{3}$து$^{3}$ரமண்ட$^{3}$ல ஜைப வத$^{3}$னெயெ
மத$^{3}$னமூருதி கோடினிப$^{4}$ லாவண்யபூரிதளே
பது$^{3}$ம நயனளே நாஸ சம்பக
பி$^{4}$து$^{3}$ரப$^{2}$லக$^{1}$ ஸுபா$^{2}$ல குந்தள
மத$^{3}$னகார்முக புப்$^{3}$பு$^{3}$யுக$^{3}$ளவு கருணயுக$^{3}$ ஶோபெ$^{4}$ ||11

உதிதபாஸ்கர கோடிபாஸளெ - உதய சூரியனைப் போல கோடி மடங்கு ஒளி பொருந்தியவளே; பிதுர மண்டல ஜைப வதனெயெ - மின்னல் வீசும் வான்வெளியை ஜெயிப்பதான முகத்தைக் கொண்டவளே; மதனமூருதி - அழகான மூர்த்தியைக் கொண்டவளே; கோடினிப லாவண்யபூரிதளே - கோடி மின்னல்களைப் போல ஒளிர்பவளே; பதும நயனளே - தாமரைக் கண்களைக் கொண்டவளே; நாஸசம்பக - சம்பக மலர்களைப் போன்ற மூக்கினைக் கொண்டவளே; பிதுர பலக - மென்மையான (உள்ளங்கை) கைகளைக் கொண்டவளே: ஸுபால குந்தள - அழகான நெற்றியில் வந்து விழுவதான முன் சடைகள்; மதனகார்முக - அழகான சிரிப்பினைக் கொண்டவளே; புப்புயுகளவு - உன்னுடைய இரு புருவங்கள்; கருணயுக ஷோபெ - கருணையைக் காட்டுகிறதே, மங்களங்களை அருள்பவளே.

உதய சூரியனைப் போல கோடி மடங்கு ஒளி பொருந்தியவளே, மின்னல் வீசும் வான்வெளியை ஜெயிப்பதான முகத்தைக் கொண்டவளே, அழகான மூர்த்தியைக் கொண்டவளே, கோடி மின்னல்களைப் போல ஒளிர்பவளே, தாமரைக் கண்களைக் கொண்டவளே, சம்பக மலர்களைப் போன்ற மூக்கினைக் கொண்டவளே, மென்மையான (உள்ளங்கை) கைகளைக் கொண்டவளே, அழகான நெற்றியில் வந்து விழுவதான முன் சடைகள் மற்றும் அழகான சிரிப்பினைக் கொண்டவளே, உன்னுடைய இரு

புருவங்கள் கருணையைக் காட்டுகிறதே, மங்களங்களை அருள்பவளே.

கத3பு கன்னடி3 குமுத3 குட்மல
ரத3னபங்க்தியு ரக்த ஓஷ்டவு
சதுரெயானன மந்த3ஹாஸவு சந்த்ரசந்த்3ரிகெயு
உத3ய தாம்ரலலாட ஶோபி4தெ
ஒத3கி3 ராஜிப ப்4ருங்க3குந்தளெ
உத3க பி3ந்து3க3ளெம்போ3 பைதலெ முத்து ராஜிதளெ ||12

கதபு கன்னடி - உன்னுடைய கன்னங்கள் கண்ணாடியைப் போல ஒளிர்கின்றன; குமுத குட்மல - தாமரை மொட்டுக்களைப் போல உள்ளதான; ரதனபங்க்தியு - ரத்னங்களின் வரிசைகளைப் போன்றதான (பற்கள்); ரக்த ஓஷ்டவு - ரத்தச் சிவப்பான உதடுகள்; சதுரெயானன மந்தஹாஸவு - அனைத்தும் அறிந்தவளின் மந்தகாசச் சிரிப்பானது; சந்த்ர சந்த்ரிகெயு - நிலவொளியைப் போல பளீரென்று இருக்கிறது; உதய தாம்ர லலாட - உதய சூரியனைப் போன்றதான நெற்றி; ஷோபிதெ - அழகானவளே; ஒதகி ராஜிப ப்ருங்க குந்தளெ - நன்கு வளர்ந்த குவளை மலர் போல இருப்பவளே; உதக பிந்துகளெம்போ - தண்ணீர் துளிகளைப் போன்றதான; பைதலே முத்து ராஜிதளெ - வரிசையான பற்களைக் கொண்டு வீற்றிருப்பவளே.

உன்னுடைய கன்னங்கள் கண்ணாடியைப் போல ஒளிர்கின்றன. தாமரை மொட்டுக்களைப் போல உள்ளதான, ரத்னங்களின் வரிசைகளைப் போன்றதான (பற்கள்), ரத்தச் சிவப்பான உதடுகள், அனைத்தும் அறிந்தவளின் மந்தகாசச் சிரிப்பானது, நிலவொளியைப் போல பளீரென்று இருக்கிறது. உதய சூரியனைப் போன்றதான நெற்றியைக் கொண்டவளே, அழகானவளே, நன்கு வளர்ந்த குவளை மலர் போல இருப்பவளே, தண்ணீர் துளிகளைப் போன்றதான, வரிசையான பற்களைக் கொண்டு வீற்றிருப்பவளே.

முத்3து3 சுப3கவு கம்பு3 கந்த4ர
பொத்3து3கொண்டி3ஹ பா3ஹுத்3வந்த்3வவு
எத்3து3 தோருத கரிய கரதெர தாவெ ஶோபி4பவு
முத்3ர ரத்னாங்கு3ளிய ஸங்க4தி3
போதி3த3 ஹஸ்தத்வயவு ஶோபி4ப

பத்$^{3}$மகட்மக$^{3}$ளெனிஸி ஸேவகக$^{3}$ப$^{4}$ய நீடு$^{3}$வவு ||13

முத்து சுபகவு - அழகான கன்னங்கள்; கம்பு கந்தர - சங்கு கழுத்து; பொத்துகொண்டிஹ - இதனை தாங்கியிருக்கும்; பாஹுத்வந்த்வவு - இரு தோள்கள்; எத்து தோருத - நன்றாக எடுத்துக் காட்டும்; கரிய கரதெர தாவே ஷோபிபவோ - வலிமையாக கரங்கள் மிகவும் அழகாக இருக்கின்றன; முத்ர ரத்னாங்குளிய - அழகான ரத்தினங்களால் ஆன மோதிரங்களை அணிந்ததான; போதித ஹஸ்தத்வயவு - இரு கரங்கள்; ஷோபிப - ஒளிர்கின்றன; பத்மகட்மகளெனிஸி - தாமரைத் தண்டுகளைப் போல இருந்து; ஸேவககபய நீடுவவு - உன் பக்தர்களுக்கு அபயங்களை அளிக்கிறது.

அழகான கன்னங்கள், சங்கு கழுத்து, இதனை தாங்கியிருக்கும், இரு தோள்களை நன்றாக எடுத்துக் காட்டும் வலிமையாக கரங்கள் மிகவும் அழகாக இருக்கின்றன. அழகான ரத்தினங்களால் ஆன மோதிரங்களை அணிந்ததான இரு கரங்கள் ஒளிர்கின்றன. தாமரைத் தண்டுகளைப் போல இருந்து, உன் பக்தர்களுக்கு அபயங்களை அளிக்கிறது.

ப$^{4}$க்தஜனததி ப்ரேமவாரிதெ$^{4}$
ப$^{4}$க்தஜன ஹ்ருத் பத்$^{3}$மவாஸினி
ப$^{4}$க்தஜனதா$^{3}$ரித்$^{3}$ர்ய ஹாரியெ நமிபெ நனவரத
லகுமி க்ரமுக ஸுகண்ட$^{2}$த$^{3}$லி ஸ்ரீ
ரேக$^{2}$ ஶோபி$^{4}$தெ நித்ய நித்யதி$^{3}$
முகுத ஹாராவளி ஸுஶோபி$^{4}$தெ பரமமங்க$^{3}$ளளெ ||14

பக்தஜனததி ப்ரேமவாரிதெ - பக்தர்களுக்கு அன்பினை (அருளை) வாரி வழங்கும் கடலே; பக்தஜன ஹ்ருத்பத்மவாஸினி - பக்தர்களின் இதய கமலத்தில் வசிப்பவளே; பக்தஜன தாரித்ர்ய ஹாரியெ - பக்தர்களின் ஏழ்மையை போக்குபவளே; நமிபெனனவரத - உன்னை எப்போதும் வணங்குகிறேன்; லகுமி க்ரமுக ஸுகண்டதலி - பாக்கு மரத்தைப் போல வெண்மையாக இருக்கும் கழுத்தில்; ஸ்ரீரேக ஷோபிதெ - ரேகைகள் அழகாக ஒளிர்கின்றன; நித்ய நித்யதி - எப்போதும்; முகுத ஹாராவளி - மலர்ந்த மலர் மாலைகளை அணிந்தவளே; ஸுஷோபிதெ பரம மங்களே - மங்களங்களை அருள்பவளே.

பக்தர்களுக்கு அன்பினை (அருளை) வாரி வழங்கும் கடலே, பக்தர்களின் இதய கமலத்தில் வசிப்பவளே. பக்தர்களின் ஏழ்மையை போக்குபவளே. உன்னை எப்போதும் வணங்குகிறேன். பாக்கு மரத்தைப் போல வெண்மையாக இருக்கும் கழுத்தில், ரேகைகள் அழகாக ஒளிர்கின்றன. எப்போதும், மலர்ந்த மலர் மாலைகளை அணிந்தவளே, மங்களங்களை அருள்பவளே.

நின்னதா$^{3}$ஸன மாடெ$^{3}$ லகுமியெ
க$^{4}$ன்னதர ஸௌபா$^{4}$க்$^{3}$ய ஸம்பத$^{3}$
சென்னவாகி$^{3}$ நீடி$^{3}$ என்னய ஸத$^{3}$னதொ$^{3}$ளகி$^{3}$த்து$^{3}$
நின்ன பதியொட$^{3}$கூ$^{3}$டி$^{3}$ தி$^{3}$னதி$^{3}$ன
என்ன கையலி பூஜெ கொ$^{3}$ள்ளுத
நின்ன ரூபவ தோரி பாலிஸு பால ஸாக$^{3}$ரஜெ ||15

நின்னதாஸன மாடெ லகுமியெ - ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னுடைய தாஸனை (பின்வருமாறு) ஆக்குவாயாக; கன்னதர ஸௌபாக்ய ஸம்பத - அபாரமான செல்வங்களைக் கொண்டவனாக; சென்னவாகி நீடி - அந்த செல்வங்களை அளித்து; என்னய ஸதனதொளகித்து - என்னுடைய வீட்டில் (மனதில்) எப்போதும் இருந்து; நின்ன பதியொடகூடி - உன்னுடைய கணவனான ஸ்ரீஹரியுடன் எப்போதும் இருந்து; தினதின - எப்போதும்; என்ன கையலி பூஜெ கொள்ளுத - என்னிடம் பூஜையை பெற்றுக்கொண்டு; நின்ன ரூபவ தோரி - உன்னுடைய தரிசனத்தை அளித்து; பாலிஸு பாலஸாகரஜெ - பாற்கடலில் தோன்றியவளே, என்னை அருள்வாயாக.

ஸ்ரீலட்சுமிதேவியே, உன்னுடைய தாஸனை (பின்வருமாறு) ஆக்குவாயாக. அபாரமான செல்வங்களைக் கொண்டவனாக, அந்த செல்வங்களை அளித்து, என்னுடைய வீட்டில் (மனதில்) எப்போதும் இருந்து, உன்னுடைய கணவனான ஸ்ரீஹரியுடன் எப்போதும் இருந்து, எப்போதும் என்னிடம் பூஜையை பெற்றுக்கொண்டு, உன்னுடைய தரிசனத்தை அளித்து, பாற்கடலில் தோன்றியவளே, என்னை அருள்வாயாக.

மாதெ நின்னய ஜடர கமல ஸு
ஜாதனாகி$^{3}$ஹ ஸுதன தெரத$^{3}$லி
ப்ரீதிபூர்வக பா$^{4}$க்$^{3}$ய நிதி$^{4}$க$^{3}$ளனித்து நித்யத$^{3}$லி

நீத ப$^{4}$குதி ஞான பூர்வக
தா$^{3}$த கு$^{3}$ரு ஜக$^{3}$ன்னாத$^{2}$ விட்டலன
ப்ரீதிகொ$^{3}$ளிஸுவ பா$^{4}$க்$^{3}$ய பாலிஸி பொரெயெ நீயென்ன ||16

மாதெ - தாயே; நின்னய ஜடர கமல ஸுஜாதனாகிஹ ஸுதன தெரதலி - உன்னுடைய தாமரை வயிற்றிலிருந்து பிறந்தவனான மகனைப் போல; ப்ரீதிபூர்வக பாக்ய நிதிகளனித்து - (என்னை நினைத்து) அன்புடன், பாக்கியங்களை அருளி; நித்யதலி - எப்போதும்; நீத பகுதி ஞான பூர்வக - அபாரமான பக்தி, ஞானங்களுடன்; தாத குரு ஜகன்னாத விட்டலன - தந்தையான குரு ஜகன்னாத விட்டலனின்; ப்ரீதிகொளிஸுவ பாக்ய பாலிஸி - அன்பினைப் பெறும் வழியினை அருளி; பொரெயெ நீயென்ன - என்னை அருள்வாயாக.

தாயே, உன்னுடைய தாமரை வயிற்றிலிருந்து பிறந்தவனான மகனைப் போல (என்னை நினைத்து), அன்புடன், பாக்கியங்களை அருளி, எப்போதும், அபாரமான பக்தி, ஞானங்களுடன்; தந்தையான குரு ஜகன்னாத விட்டலனின், அன்பினைப் பெறும் வழியினை அருளி, என்னை அருள்வாயாக.

***

**ஸ்ரீகுருப்யோ நம:**

# ஸ்ரீலட்சுமி ஹ்ருதய

## ஸ்ரீகுருஜகன்னாததாஸர் இயற்றியது
## (மூலம் மட்டும் - பாராயணத்திற்காக)

ஸ்ரீமனோஹரே லகுமி தவபத$^{3}$
தாமரஸயுக$^{3}$ ப$^{3}$ஜிபெ நித்யதி$^{3}$
ஸோமஸோத$^{3}$ரி பரமமங்க$^{3}$ளெ தப்தகாஞ்சனளே |
ஸோமஸூர்ய ஸுதேஜோரூபளே
ஹேமஸன்னிப$^{4}$ பீதவஸனளெ
சாமீகரமய ஸர்வபூ$^{4}$ஷண ஜாலமண்டி$^{3}$தளே ||1

பீ$^{3}$ஜபூரித ஹேமகலஶவ
ராஜமான ஸுஹேம ஜலஜவ
நைஜ கரத$^{3}$லி பிடி$^{3}$து$^{3}$கொண்டு$^{3}$ ப$^{4}$குத ஜனததி$^{3}$கெ$^{3}$ |
மாஜத$^{3}$லெ ஸகலேஷ்ட நீடு$^{3}$வ
ராஜமுகி$^{2}$ மஹதா$^{3}$தி$^{3}$வந்த்$^{3}$யளெ
மூஜக$^{3}$த்திகெ$^{3}$ மாதெ ஹரிவாமாங்கதொ$^{3}$ளகி$^{3}$ர்ப்பெ ||2

ஸ்ரீமஹத்தர பா$^{4}$க்யமானியே
ஸ்தௌமி லகுமி அனாதி$^{3}$ ஸர்வ ஸு
காம ப$^{2}$லக$^{3}$ளனீவ ஸாத$^{4}$ன ஸுக$^{2}$வ கொடு$^{3}$திர்ப்ப |
காமஜனனியெ ஸ்மரிபெ நித்யதி$^{3}$
ப்ரேமபூர்வக ப்ரேரிஸென்னனு
ஹே மஹேஶ்வரி நின்ன வசனவ த$^{4}$ரிஸி ப$^{4}$ஜிஸுவெனு ||3

ஸர்வ ஸம்பத$^{3}$வீவ லகுமியெ
ஸர்வ பா$^{4}$க்$^{3}$யவனீவ தே$^{3}$வியெ
ஸர்வ மங்க$^{3}$ளவீவ ஸுரவர ஸார்வபௌ$^{4}$மியளே |
ஸர்வ ஞானவனீவ ஞானியெ

தானியங்கள்; பாக்யவ – ஆகிய பாக்கியங்களை; இனிது நீ எனகித்து பாலிஸு – நீ எனக்கு கொடுத்து அருள்வாயாக; மினுகுதிஹ – ஒளிர்ந்து கொண்டிருப்பதான; கனவாத – அபாரமான; நின்னய களெயு – உன்னுடைய களைகள்; □ோபிஸலி – (என் மேல்) விழுந்து ஒளிரட்டும்.

தாயே, என்னுடைய அஞ்ஞானம் என்னும் இருட்டினை தொடர்ந்து அழித்து, உன்னையே நினைத்தவாறு, தியானம் செய்வதான, தூய்மையான (யதார்த்த) ஞானம் என்னும் செல்வத்தை, தங்கம், செல்வங்கள், தானியங்கள் ஆகிய பாக்கியங்களை, நீ எனக்கு கொடுத்து அருள்வாயாக. ஒளிர்ந்து கொண்டிருப்பதான, அபாரமான உன்னுடைய களைகள், (என் மேல்) விழுந்து ஒளிரட்டும்.

**நிருத தமததி ஹரிப ஸூர்யன**
**தெரதி$^{3}$ க்ஷிப்ரதி$^{3}$ ஹரிஸ லக்ஷ்மிய**
**ஸரகு மாட$^{3}$தெ$^{3}$ தரிது$^{3}$ ஓடி$^{3}$ஸு து$^{3}$ரித ராஶிக$^{3}$ளா**
**பரிபரிய ஸௌபா$^{4}$க்$^{3}$ய நிதி$^{4}$யனு**
**ஹருஷதி$^{3}$ந்த$^{3}$லி நீடி$^{3}$ என்னனு**
**த$^{2}$ரத$^{2}$ரதி$^{3}$ க்ருத க்ருத்யனிளெயொள கெ$^{3}$னிஸு த$^{3}$யதி$^{3}$ந்த$^{3}$ ||25**

நிருத – எப்போதும்; தமததி ஹரிப – கடும் இருட்டினை விலக்கும்; ஸூர்யன தெரதி – சூரியனைப் போல; க்ஷிப்ரதி – வேகமாக; ஹரிஸ லக்ஷ்மிய – ஹரி ஸமேதளாத லட்சுமியே; துரித ராஷிகளா – கெட்டவற்றை; ஸரகு மாடதெ – கவனிக்காமல் (உடனடியாக); தரிது ஓடிஸு – அடித்து விரட்டுவாயாக; பரிபரிய – விதம்விதமான; ஸௌபாக்ய நிதியனு – ஸௌபாக்ய நிதியை; ஹருஷதிந்தலி நீடி – மிகவும் மகிழ்ச்சியுடன் அளித்து; என்னனு – என்னை; தரதரதி – விதம்விதமான; க்ருத க்ருத்யனு – நற்செயல்களை செய்தவன் என்று; தயதிந்த – மிகுந்த கருணையுடன். இளெயொள கெனிஸு – இந்த பூமியில் நினைக்கச் செய்;

எப்போதும், கடும் இருட்டினை விலக்கும் சூரியனைப் போல வேகமாக – ஹரி ஸமேதளாத லட்சுமியே, கெட்டவற்றை கவனிக்காமல் (உடனடியாக), அடித்து விரட்டுவாயாக.

விதம்விதமான ஸௌபாக்ய நிதியை மிகவும் மகிழ்ச்சியுடன் அளித்து, என்னை விதம்விதமான நற்செயல்களை செய்தவன் என்று மிகுந்த கருணையுடன், இந்த பூமியில் நினைக்கச் செய்.

**அதுள மஹதை[3]ஶ்வர்ய மங்க[3]ள**
**ததியு நின்னய களெக[3]ளொளகெ[3]**
**விததவாகி[3] விராஜமானத[3] லிர்ப காரணதீ[3]**
**ஶ்ருதியு நின்னய மஹிமெ திளியது[3]**
**ஸ்துதிஸ ப[3]ல்லெனே தாயே பேள்வுது[3]**
**மதிவிஹீனனு நின்ன கருணகெ[1] பாத்ரனெனிஸம்ம ||26**

அதுள மஹதைஸ்வர்ய – அபாரமான செல்வங்கள்; மங்கள ததியு – மங்களகரமாக; நின்னய களெகளொளகெ – உன்னுடைய களைகளில் (அருளில்); விததவாகி – ஏராளமாக; விராஜமானதலிர்ப காரணதி – நிறைந்திருப்பதால்; ஸ்ருதியு நின்னய மஹிமெ திளியது – வேதங்களும் கூட உன் மகிமையை முழுமையாக அறிவதில்லை; ஸ்ருதிஸ பல்லெனெ – ஆகையால் நானும்கூட உன்னை (மகிமைகளை முழுவதுமாக அறிந்து) வணங்கமுடியாதவனாக இருக்கிறேன்; தாயே பேள்வுது – தாயே நீயே சொல்வாயாக; மதிவிஹீனனு – நான் மதி இல்லாதவன்; நின்ன கருணகெ – உன்னுடைய கருணைக்கு; பாத்ரனெனிஸம்ம – என்னை பாத்திரமாக ஆக்குவாயாக.

அபாரமான செல்வங்கள், மங்களகரமாக, உன்னுடைய களைகளில் (அருளில்), ஏராளமாக நிறைந்திருப்பதால், வேதங்களும் கூட உன் மகிமையை முழுமையாக அறிவதில்லை. ஆகையால் நானும்கூட உன்னை (மகிமைகளை முழுவதுமாக அறிந்து) வணங்கமுடியாதவனாக இருக்கிறேன். தாயே, நீயே சொல்வாயாக. நான் மதி இல்லாதவன். உன்னுடைய கருணைக்கு என்னை பாத்திரமாக ஆக்குவாயாக.

**நின்ன மஹாதா[3]வேஶ பா[4]க்[3]யகெ**
**என்ன அர்ஹன மாடு[3] லகுமியெ**
**க[4]ன்னதர ஸௌபா[4]க்[3]ய நிதி[4] ஸம்பன்னனெனிஸென்ன**
**ரன்னெ நின்னய பாத[3]கமலவ**
**மன்னத[3]லி ஸம்ஸ்துதிஸி பே[3]டு[3]வெ**

**நின்ன பரதர கருண கவசவ தொடி$^3$ஸி பொரெயம்ம ||27**

நின்ன மஹதாவேஷ பாக்யகெ – உன்னுடைய (உன்னிடம் இருப்பதான) அபாரமான பாக்கியத்திற்கு; என்ன அர்ஹன மாடு – என்னை தகுதி உடையவனாக ஆக்கு; லகுமியெ – ஸ்ரீலட்சுமிதேவியே; கன்னதர ஸௌபாக்ய நிதி – ஏராளமான செல்வங்களை; ஸம்பன்னனெனிஸென்ன – கொண்டவனாக என்னை ஆக்குவாயாக; ரன்னெ – மகாமகிமைகள் பொருந்தியவளே; நின்னய பாதகமலவ – உன்னுடைய பாத கமலங்களை; மன்னதலி ஸம்ஸ்துதிஸி பேடுவெ – என் மனதில் நினைத்து வணங்குவேன்; நின்ன – உன்னுடைய; பரதர கருண கவசவ – அற்புதமான கருணை என்னும் கவசத்தை; தொடிஸி பொரெயெம்ம – (கவசத்தால்) என்னை காத்து, அருள்வாயாக.

உன்னுடைய (உன்னிடம் இருப்பதான) அபாரமான பாக்கியத்திற்கு, என்னை தகுதி உடையவனாக ஆக்கு. ஸ்ரீலட்சுமிதேவியே, ஏராளமான செல்வங்களை கொண்டவனாக என்னை ஆக்குவாயாக. மகாமகிமைகள் பொருந்தியவளே, உன்னுடைய பாத கமலங்களை என் மனதில் நினைத்து வணங்குவேன். உன்னுடைய அற்புதமான கருணை என்னும் கவசத்தை (கவசத்தால்) என்னை காத்து அருள்வாயாக.

**பூ$^4$த நரனனு மாடி$^3$ களெக$^3$ள**
**வ்ராததி$^3$ந்த$^3$லி என்ன நிஷ்டவ**
**கா$^4$திஸீக$^3$லெ எனகெ$^3$ ஒலிது$^3$ ப$^3$ந்து$^3$ ஸூளி முந்தெ$^3$**
**மாதெ பா$^4$ர்க்க$^3$வி கருணி நின்னய**
**நாத$^2$னிந்தொ$^3$ட$^3$கூ$^3$டி$^3$ ஸந்தத**
**ப்ரீதளாகி$^3$ரு என்ன மனெயொளு நில்லு நீ பி$^3$ட$^3$தே$^3$ ||28**

என்ன நிஷ்டவ காதிஸி – என்னுடைய கஷ்டங்களை விலக்கு; ஈகலெ – இப்போதே (உடனடியாக); களெகள வ்ராததிந்தலி – உன்னுடைய களைகளை என் மேல் வீசி; பூத நரனனு மாடி – என்னை மிகச் சிறந்தவன் ஆக்கி; எனகெ ஒலிது பந்து – என் பிரார்த்தனைகளுக்கு மெச்சி; ஸூளி முந்தெ – என் முன் நிற்பாயாக (தரிசனம் அளிப்பாயாக); மாதெ பார்க்கவி – பார்க்கவியே, தாயே; கருணி – கருணியே; நின்னய

நாதனிந்தொடகூடி – உன்னுடைய தலைவன் உடன் கூடி; என்ன மனெயொளு – என் வீட்டில் (என் மனதில்); ஸந்தத ப்ரீதளாகிரு – எப்போதும் மகிழ்ச்சியாக இரு; நில்லு நீ பிடதெ – சென்றுவிடாமல் தொடர்ச்சியாக இருப்பாயாக.

என்னுடைய கஷ்டங்களை விலக்கு. இப்போதே (உடனடியாக) உன்னுடைய களைகளை என் மேல் வீசி, என்னை மிகச் சிறந்தவன் ஆக்கி, என் பிரார்த்தனைகளுக்கு மெச்சி, என் முன் நிற்பாயாக (தரிசனம் அளிப்பாயாக). பார்க்கவியே, தாயே, கருணியே, உன்னுடைய தலைவன் உடன் கூடி, என் வீட்டில் (என் மனதில்) எப்போதும் மகிழ்ச்சியாக இரு. சென்றுவிடாமல் தொடர்ச்சியாக இருப்பாயாக.

**பரமஸிரி வைகுண்ட$^{2}$ லகுமியெ**
**ஹரிய ஸஹிதத$^{3}$லென்ன முந்த$^{3}$கெ**
**ஹருஷ படு$^{3}$தலி ப$^{3}$ந்து$^{3}$ ஶோபி$^{4}$ஸு கால களெயத$^{3}$லே**
**வரதெ$^{3}$ நா பா$^{3}$ரெந்து$^{3}$ நின்னனு**
**கரெதெ$^{3}$ மனவனு முட்டி ப$^{4}$குதிய**
**ப$^{4}$ரதி$^{3}$ பா$^{3}$கி$^{3}$த$^{3}$ ஶிரதி$^{3}$ நமிஸுவெ க்ருபெய மாடெ$^{3}$ந்து$^{3}$ ||29**

பரமஸிரி வைகுண்ட லகுமியெ – ஹே வைகுண்டத்தில் இருப்பவளே, லட்சுமிதேவியே; ஹரிய ஸஹிததி – ஸ்ரீஹரியுடன்; என்ன முந்தகெ – என் முன்னே; ஹருஷ படுதலி பந்து – மிகவும் மகிழ்ச்சியுடன் வந்து; ஶோபிஸு கால களெயதலெ – உடனடியாக வந்து தரிசனம் அளிப்பாயாக; வரதெ – வரங்களை அளிப்பவளே; நா நின்னனு பாரெந்து கரெதெ – உன்னை வா என்று நான் அழைத்தேன்; மனவனு முட்டி – மனம் உருக; பகுதிய – பக்தி செய்து; பரதி – தொடர்ச்சியாக; பாகித ஷிரதி – தலை குவித்து; நமிஸுவெ க்ருபெய மாடெந்து – என்னை அருளவேண்டும் என்று உன்னிடம் வணங்குவேன்.

ஹே வைகுண்டத்தில் இருப்பவளே, லட்சுமிதேவியே, ஸ்ரீஹரியுடன், என் முன்னே மிகவும் மகிழ்ச்சியுடன் வந்து, உடனடியாக வந்து தரிசனம் அளிப்பாயாக. வரங்களை அளிப்பவளே, உன்னை வா என்று நான் அழைத்தேன். மனம்

உருக, பக்தி செய்து, தொடர்ச்சியாக தலை குவித்து, என்னை அருளவேண்டும் என்று உன்னிடம் வணங்குவேன்.

**ஸத்யலோகத$^{3}$ லகுமி நின்னய**
**ஸத்ய ஸன்னிதி$^{4}$ என்ன மனெயலி**
**நித்ய நித்யதி$^{3}$ பெர்ச்சி ஹப்$^{3}$த$^{3}$லி ஜக$^{3}$தி$^{3}$ ஜனததிகெ$^{3}$**
**அத்யதி$^{4}$க ஆஶ்சர்ய தோரிஸி**
**மர்த்யரோத்தமனெனிஸி நீ க்ருத**
**க்ருத்யனீபரி மாடி$^{3}$ ஸிரி ஹரி கூ$^{3}$டி$^{3}$ நலிதா$^{3}$டே$^{3}$ ||30**

ஸத்யலோகத லகுமி – ஸத்ய லோகத்தில் நிறைந்திருப்பவளான லட்சுமிதேவியே; நின்னய ஸத்ய ஸன்னிதி – உன்னுடைய நிச்சயமான இருப்பு; என்ன மனெயலி – என் வீட்டில் (மனதில்); நித்ய நித்யதி பெர்ச்சி ஹப்தலி – தினம் தினமுமாக வளர்ந்து பெருகட்டும்; ஜகதி ஜனததிகெ – உலகில் இருக்கும் மக்களுக்கு; அத்யதிக ஆஸ்சர்ய தோரிஸி – மிகவும் வியப்பினை தந்து; மர்த்யரோத்தமனெனிஸி – என்னை உன்னுடைய சிறந்த பக்தன் என்று சொல்லச் செய்து; க்ருத க்ருத்யனு – என்னை நற்செயல்களை செய்பவன் என்று; நீ மாடி – நீ செய்து; ஸிரி ஹரி கூடி நலிதாடே – ஸ்ரீஹரியுடன் சேர்ந்து நீ எப்போதும் இருக்க வேண்டும்.

ஸத்ய லோகத்தில் நிறைந்திருப்பவளான லட்சுமிதேவியே, உன்னுடைய நிச்சயமான இருப்பு, என் வீட்டில் (மனதில்), தினம் தினமுமாக வளர்ந்து பெருகட்டும். உலகில் இருக்கும் மக்களுக்கு, மிகவும் வியப்பினை தந்து, என்னை உன்னுடைய சிறந்த பக்தன் என்று சொல்லச் செய்து, என்னை நற்செயல்களை செய்பவன் என்று நீ செய்து, ஸ்ரீஹரியுடன் சேர்ந்து நீ எப்போதும் இருக்க வேண்டும்.

**க்ஷீரவாரிதி$^{4}$ லகுமியே பதி**
**நாரஸிம்ஹன கூ$^{3}$டி$^{3}$ ப$^{3}$ருவுது$^{3}$**
**தூ$^{3}$ர நோட$^{3}$தெ$^{3}$ ஸாரெகெ$^{3}$ரெது$^{3}$ ப்ரஸாத$^{3}$ கொடு$^{3}$ எனகெ$^{3}$**
**வாரிஜாக்ஷியெ நின்ன கருணா**
**ஸார பூர்ண கடாக்ஷதி$^{3}$ந்த$^{3}$லி**
**பா$^{3}$ரி பா$^{3}$ரிகெ$^{3}$ நோடி$^{3}$ பாலிஸு பரம பாவன்னே ||31**

க்ஷீரவாரிதி லகுமியே – பாற்கடலில் வசிப்பவளான லட்சுமிதேவியே; பதி நாரஸிம்ஹன கூடி பருவுது – உன் கணவனான நரசிம்ம ஸ்வாமியுடன் சேர்ந்து நீ வரவேண்டும்; தூர நோடதெ – என்னை புறக்கணிக்காமல்; ஸாரெகெரெது – அனைத்தையும் அருளி; ப்ரஸாத கொடு எனகெ – எனக்கு ப்ரஸாதத்தை கொடுப்பாயாக; வாரிஜாக்ஷியெ – தாமரைக் கண்களை கொண்டவளே; நின்ன கருணா ஸார – கருணை நிறைந்ததான உன்னுடைய; பூர்ண கடாக்ஷதிந்தலி – முழுமையான பார்வையினால்; பாரி பாரிகெ நோடி – திரும்பத் திரும்ப என்னை பார்த்து; பாலிஸு பரம பாவன்னெ – பக்தர்களை காப்பவளே, என்னையும் காப்பாயாக.

பாற்கடலில் வசிப்பவளான லட்சுமிதேவியே, உன் கணவனான நரசிம்ம ஸ்வாமியுடன் சேர்ந்து நீ வரவேண்டும். என்னை புறக்கணிக்காமல், அனைத்தையும் அருளி, எனக்கு ப்ரஸாதத்தை கொடுப்பாயாக. தாமரைக் கண்களை கொண்டவளே, கருணை நிறைந்ததான உன்னுடைய முழுமையான பார்வையினால், திரும்பத் திரும்ப என்னை பார்த்து, பக்தர்களை காப்பவளே, என்னையும் காப்பாயாக.

**ஶ்வேத த்$^{3}$வீபத$^{3}$ லகுமி த்ரிஜக$^{3}$ன்**
**மாதெ நீ என்ன முந்தெ$^{3}$ ஶீக்$^{4}$ரதி$^{3}$**
**நாத$^{2}$னிந்தொ$^{3}$ட$^{3}$கூ$^{3}$டி$^{3}$ பா$^{3}$ரெ ப்ரஸன்ன முக$^{2}$ கமலே**
**ஜாதரூப ஸுதேஜரூபளெ**
**மாதரிஶ்வ முகா$^{2}$ர்ச்சிதாங்க்$^{4}$ரியெ**
**ஜாதரூபோத$^{3}$ராண்ட$^{3}$ ஸங்க$^{4}$கெ மாதெ ப்ரக்$^{2}$யாதெ ||32**

◌வேத த்வீபத லகுமி – ◌வேத த்வீபத்தில் இருப்பவளே, லட்சுமிதேவியே; த்ரிஜகன் மாதெ – மூன்று உலகங்களின் தாயே; நீ என்ன முந்தெ – நீ என் முன்னர்; ◌ீக்ரதி நாதனிந்தொடகூடி பாரெ – உன் தலைவன் உடன் சேர்ந்து வருவாயாக; ப்ரஸன்ன முக கமலே – ஒளி பொருந்திய முகம் கொண்டவளே; ஜாதரூப ஸுதேஜரூபளெ – தங்கமயமான, ஒளி பொருந்தியவளே; மாதரிஷ்வ முகார்ச்சிதாங்க்ரியெ – வாயுதேவரால் அர்ச்சனை செய்யப்படுபவளே (வணங்கப்படுபவளே); ஜாதரூபோதராண்ட –

தங்கத்தை வயிறாகக் கொண்டவர் (பிரம்மன்); ஸங்ககெ – அவரே முதலான அனைத்து தேவதைகளுக்கும்; மாதெ – தாயே; ப்ரக்யாதெ – உலகப் புகழ் பெற்றவளே.

□ோவேத த்வீபத்தில் இருப்பவளே, லட்சுமிதேவியே, மூன்று உலகங்களின் தாயே, நீ என் முன்னர், உன் தலைவன் உடன் சேர்ந்து வருவாயாக. ஒளி பொருந்திய முகம் கொண்டவளே, தங்கமயமான, ஒளி பொருந்தியவளே, வாயுதேவரால் அர்ச்சனை செய்யப்படுபவளே (வணங்கப்படுபவளே), தங்கத்தை வயிறாகக் கொண்டவர் (பிரம்மன்) – அவரே முதலான அனைத்து தேவதைகளுக்கும் தாயே, உலகப் புகழ் பெற்றவளே.

**ரத்னக$^{3}$ர்ப்ப$^{4}$ன புத்ரி லகுமியெ**
**ரத்னபூரித பா$^{4}$ண்ட$^{3}$ நிசயவ**
**யத்னபூர்வக தந்து$^{3}$ என்னய முந்தெ$^{3}$ நீ நில்லு**
**ரத்னக$^{2}$சித ஸுவர்ணமாலெய**
**ரத்னபத$^{3}$கத$^{3}$ ஹார ஸமுத$^{3}$ய**
**ஜத்னதி$^{3}$ந்த$^{3}$லி நீடி$^{3}$ ஸர்வதா$^{3}$ பாஹீ பரமாப்தே ||33**

ரத்னகர்ப்பன புத்ரி லகுமியெ – கடலின் மகளான லட்சுமியே (கடலிலிருந்து தோன்றியவளே); ரத்னபூரித பாண்ட நிசயவ – ரத்னங்கள் நிறைந்ததான பாத்திரத்தை; யத்னபூர்வக தந்து – நீ எடுத்துக் கொண்டு வந்து; என்னய முந்தெ நீ நில்லு – என் முன்னர் நீ நிற்பாயாக; ரத்னகசித ஸுவர்ணமாலெய – ரத்னங்கள் நிறைந்ததான தங்க மாலையை; ரத்னபதகத ஹார ஸமுதய – ரத்ன பதக்கங்கள் இருப்பதான, மாலைகளை; ஜத்னதிந்தலி நீடி – நீ எனக்கு அருளி; ஸர்வதா பாஹி பரமாப்தே – எப்போதும் என்னை காப்பாயாக.

கடலின் மகளான லட்சுமியே (கடலிலிருந்து தோன்றியவளே), ரத்னங்கள் நிறைந்ததான பாத்திரத்தை நீ எடுத்துக் கொண்டு வந்து என் முன்னர் நீ நிற்பாயாக. ரத்னங்கள் நிறைந்ததான தங்க மாலையை, ரத்ன பதக்கங்கள் இருப்பதான மாலைகளை நீ எனக்கு அருளி, எப்போதும் என்னை காப்பாயாக.

**என்ன மனெயலி ஸ்தை2ர்யதி3ந்த3லி**
**இன்னு நிஷ்சலளாகி3 நிந்திரு**
**உன்னதாதை3ஶ்வர்ய வ்ருத்3தி3யகெ3யிஸு நிர்மலளே**
**ஸன்னுதாங்கி3யே நின்ன ஸ்துதிபெ ப்ர**
**ஸன்ன ஹ்ருத3யதி3 நித்ய நீ ப்ரஹ**
**ஸன்முக2தி3 மாதாடு3 வரக3ள நீடு3 நலிதா3டு3 ||34**

என்ன மனெயலி – என் வீட்டில்; ஸ்தைர்யதிந்தலி – நிரந்தரமாக; இன்னு நிஷ்சலளாகி நிந்திரு – எவ்வித சஞ்சலமும் (சந்தேகமும்) இன்றி நிலைத்திருப்பாயாக; உன்னதாதை ◌்வர்ய – மிகவும் சிறந்ததான செல்வங்களை; வ்ருத்தியகெயிஸு – கொடுத்து, அதனை தொடர்ச்சியாக அதிகப்படுத்துவாய்; நிர்மலளே – பவித்ரமானவளே; ஸன்னுதாங்கியெ – வணங்கத்தக்கவளே; நின்ன ஸ்துதிபெ – உன்னை நான் வணங்குவேன்; ப்ரஸன்ன ஹ்ருதயதி – மிகவும் மகிழ்ச்சியான இதயத்துடன்; நித்ய நீ ப்ரஹ ஸன்முகதி மாதாடு – தினமும் நீ மிகவும் மகிழ்ச்சியான முகத்துடன் என்னிடம் பேசுவாயாக; வரகள நீடு – வரங்களை அளிப்பாயாக; நலிதாடு – என்னிடம் நிலைப்பாயாக.

என் வீட்டில், நிரந்தரமாக, எவ்வித சஞ்சலமும் (சந்தேகமும்) இன்றி நிலைத்திருப்பாயாக. மிகவும் சிறந்ததான செல்வங்களை கொடுத்து, அதனை தொடர்ச்சியாக அதிகப்படுத்துவாய். பவித்ரமானவளே, வணங்கத்தக்கவளே, உன்னை நான் வணங்குவேன். மிகவும் மகிழ்ச்சியான இதயத்துடன், தினமும் நீ மிகவும் மகிழ்ச்சியான முகத்துடன் என்னிடம் பேசுவாயாக. வரங்களை அளிப்பாயாக, என்னிடம் நிலைப்பாயாக.

**ஸிரியெ ஸிரி மஹாபூ4தி தா3யிகெ1**
**பரமெ நின்னொளகி3ர்ப்ப ஸுமஹ**
**த்தரவாத்மக நிதி4க3ளூர்த்4வகெ1 தந்து3 கருணத3லி**
**கரதி3 பிடி3த3த3னெத்தி தோரிஸி**
**த்வரதி3 நீ எனகி3த்து பாலிஸு**
**த்4ரணி ரூபளெ நின்ன சரணகெ ஶரணு நா மாள்பெ ||35**

ஸிரியெ – ஸ்ரீலட்சுமிதேவியே; ஸிரி மஹாபூதி தாயிகெ – மிகச் சிறந்த செல்வங்களை அருள்பவளே; பரமெ – உத்தமளே;

நின்னொளகிர்ப்ப ஸுமஹத்தரவாத்மக – உன்னிடம் இருக்கும் மிகச் சிறந்ததான; நிதிகளூர்த்வகெ தந்து – நிதிகளை மிகவும் அதிகமாக தந்து; கருணதலி – மிகவும் கருணையுடன்; கரதி பிடிததனெத்தி தோரிஸி – கைகளில் பிடித்திருப்பதை (அருளை) எனக்குக் காட்டி; த்வரதி நீ எனகித்து பாலிஸு – உடனடியாக நீ எனக்கு அருளி; தரணி ரூபளெ – பூதேவியே; நின்ன சரணகெ ஷரணு நா மாள்பெ – உன் பாத கமலங்களில் நான் விழுந்து வணங்குவேன்.

ஸ்ரீலட்சுமிதேவியே, மிகச் சிறந்த செல்வங்களை அருள்பவளே, உத்தமளே, உன்னிடம் இருக்கும் மிகச் சிறந்ததான நிதிகளை மிகவும் அதிகமாக தந்து, மிகவும் கருணையுடன், உன் கைகளில் பிடித்திருப்பதை (அருளை) எனக்குக் காட்டி, உடனடியாக நீ எனக்கு அருள்வாயாக, பூதேவியே, உன் பாத கமலங்களில் நான் விழுந்து வணங்குவேன்.

**வஸுதெ$^{4}$ நின்னொளகி$^{3}$ர்ப்ப வஸுவனு**
**வஶவ மாள்புது$^{3}$ எனகெ$^{3}$ ஸர்வதா$^{3}$**
**வஸுஸுதோ$^{3}$க்$^{3}$த்$^{3}$ரியு எம்ப$^{3}$ நாமவு நினகெ$^{3}$ இருதிஹுது**
**அஸம மஹிமளெ நின்ன ஶுப$^{4}$தம**
**ப$^{3}$ஸுரினொளகி$^{3}$ருதிர்ப்ப நிதி$^{4}$யனு**
**பெ$^{3}$ஸெஸு ஈக$^{3}$லே ஹஸிது$^{3}$ ப$^{3}$ந்த$^{3}$கெ$^{3}$ அஶனவித்தந்தே ||36**

வஸுதெ – பூதேவியே; நின்னொளகிர்ப்ப வஸுவனு – உன்னிடம் இருப்பதான செல்வங்களை; வஷவ மாள்புது எனகெ – எனக்கு அருள்வாயாக; ஸர்வதா – எப்போதும்; வஸுஸுதோக்த்ரியு எம்ப நாமவு – பக்தர்களை காப்பவள் என்னும் பெயர்; நினகெ இருதிஹுது – உனக்கு என்றுமே இருக்கும்; அஸம மஹிமளெ – அபாரமான மகிமைகளைக் கொண்டவளே; நின்ன ஷுபதம – உன்னுடைய மங்களகரமான; பஸுரினொளகிருதிர்ப்ப – வயிற்றில் (உன்னிடம்) இருப்பதான; நிதியனு – செல்வங்களை; பெஸெஸு – அருள்வாயாக; ஈகலெ – இப்போதே; ஹஸிது பந்தகெ அஷனவித்தந்தெ – பசியுடன் வந்தவனுக்கு உடனடியாக உணவு அளித்ததைப் போல.

பூதேவியே, உன்னிடம் இருப்பதான செல்வங்களை எனக்கு அருள்வாயாக. எப்போதும் பக்தர்களை காப்பவள் என்னும் பெயர், உனக்கு என்றுமே இருக்கும். அபாரமான மகிமைகளைக் கொண்டவளே, உன்னுடைய மங்களகரமான வயிற்றில் (உன்னிடம்) இருப்பதான செல்வங்களை, பசியுடன் வந்தவனுக்கு உடனடியாக உணவு அளித்ததைப் போல, இப்போதே அருள்வாயாக.

**ஹரிய ராணியெ ரத்னக$^{3}$ர்ப்ப$^{4}$ளெ**
**ஸரியு யாரீ ஸுரர ஸ்தோமதி$^{3}$**
**ஸரஸிஜாக்ஷியெ நின்ன ப$^{3}$ஸிரொளகி$^{3}$ருவ நவநிதி$^{4}$யா**
**மெரெவ ஹேமத$^{3}$ கி$^{3}$ரிய தெரத$^{3}$லி**
**தெரெது$^{3}$ தோரிஸி ஸலிஸு எனகெ$^{3}$**
**பரம கருணாஶாலி நமோ நமோ எந்து$^{3}$ மொரெ ஹொக்கெ ||37**

ஹரிய ராணியெ – ஸ்ரீஹரியின் தேவியே; ரத்னகர்ப்பளே – கடலில் தோன்றியவளே; ஸரியு யாரு – உனக்கு சரிசமம் என்று யாருமே இல்லை; ஈ ஸுரர ஸ்தோமதி – என்று தேவர்களை உன்னை புகழ்கிறார்கள்; ஸரஸிஜாக்ஷியே – தாமரைக் கண்களைக் கொண்டவளே; நின்ன பஸிரொளகிருவ நவநிதியா – உன் வயிற்றில் இருப்பதான நவநிதிகளை; மெரெவ ஹேமத கிரிய தெரதலி – ஒளிரும் தங்க மலையைப் போல; தெரெது தோரிஸி – எடுத்துக் காட்டி; ஸலிஸு எனகெ – எனக்கு அருள்வாயாக; பரம கருணாஷாலி – மிகவும் கருணை கொண்டவளே; நமோ நமோ எந்து – நமோ நமோ என்று; மொரெ ஹொக்கெ – நான் உன்னை வணங்குகிறேன்.

ஸ்ரீஹரியின் தேவியே, கடலில் தோன்றியவளே, உனக்கு சரிசமம் என்று யாருமே இல்லை என்று தேவர்களை உன்னை புகழ்கிறார்கள். தாமரைக் கண்களைக் கொண்டவளே, உன் வயிற்றில் இருப்பதான நவநிதிகளை, ஒளிரும் தங்க மலையைப் போல எடுத்துக் காட்டி, எனக்கு அருள்வாயாக. மிகவும் கருணை கொண்டவளே, நமோ நமோ என்று, நான் உன்னை வணங்குகிறேன்.

**ரஸதளத3 ஸிரி லகுமிதே3வியெ**
**ஶஶி ஸஹோத3ரி ஶீக்4ரதி3ந்த3லி**
**அஸம நின்னய ரூப தோரிஸு என்ன புரத3ல்லி**
**குஸுமக3ந்தி4யே நின்னனரியேனு**
**வஸுமதீ தளத3ல்லி பஹுபரி**
**பொஸது எனிபுது3 நின்ன ஒலுமெயு ஸகல ஜனததிகெ3 ||38**

ரஸதளத ஸிரி லகுமிதேவியே – ரஸாதளத்தில் இருப்பவளான ஸ்ரீலட்சுமிதேவியே; ி ஸஹோதரி – சந்திரனின் சகோதரியே (இருவரும் கடலில் பிறந்தவர்கள் ஆகையால்); ஷீக்ரதிந்தலி – மிகவும் விரைவாக; அஸம நின்னய ரூப தோரிஸு – சரிசமம் இல்லாத உன்னுடைய ரூபத்தை காட்டுவாயாக; என்ன புரதல்லி – என் வீட்டில் (மனதில்); குஸுமகந்தியே – மலர்களைப் போல நறுமணம் கொண்டவளே; நின்னனரியேனு – உன்னைப் பற்றி நான் அறியவில்லை; வஸுமதீ தளதல்லி – இந்த பூலோகத்தில்; ஸகல ஜனததிகெ – அனைத்து மக்களுக்கும்; நின்ன ஒலுமெயு – உன்னுடைய மகிமைகளானது; பஹுபரி பொஸது எனிபுது – மிகவும் புதியதாக (அற்புதமாக) இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

ரஸாதளத்தில் இருப்பவளான ஸ்ரீலட்சுமிதேவியே, சந்திரனின் சகோதரியே, (இருவரும் கடலில் பிறந்தவர்கள் ஆகையால்), மிகவும் விரைவாக, என் வீட்டில் (மனதில்), சரிசமம் இல்லாத உன்னுடைய ரூபத்தை காட்டுவாயாக. மலர்களைப் போல நறுமணம் கொண்டவளே, உன்னைப் பற்றி நான் அறியவில்லை. இந்த பூலோகத்தில், அனைத்து மக்களுக்கும், உன்னுடைய மகிமைகளானது, மிகவும் புதியதாக (அற்புதமாக) இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

**நாகவேணியெ லகுமி நீ மனோ**
**வேக3தி3ந்த3லி ப3ந்து3 என்னய**
**ஜாகு3மாட3தெ3 ஶிரதி3 ஹஸ்தவனிட்டு முத3தி3ந்த3**
**நீகி3ஸி தா3ரித்3ர்ய து3க்க2வ**
**ஸாகி3ஸீ ப4வபா4ர பர்வத**
**தூகி3ஸு நீ என்ன ஸத3னதி3 கனக பா4ரக3ளா ||39**

நாகவேணியே - நாகத்தைப் போன்ற நீளமான கூந்தல் கொண்டவளே; லகுமி - லட்சுமிதேவியே; நீ மனோ வேகதிந்தலி - நீ மனோ வேகத்தைப் போல வேகமாக; பந்து - வந்து; என்னய ஜாகுமாடதெ - என்னை காக்க வைக்காமல்; □ிரதி ஹஸ்தவனிட்டு - என் தலை மேல் கை வைத்து; முததிந்த - மிகவும் அன்புடன்; தாரித்ர்ய துக்கவ நீகிஸி - என் ஏழ்மையின் துக்கத்தினை நீக்கி; பவபார பர்வத ஸாகிஸீ - என் சம்சார துக்கம் என்னும் மலையை உடைத்து; நீ என்ன ஸதனதி - நீ என் வீட்டில்; கனக பாரகளா - தங்க மலைகளை; தூகிஸு - இறக்குவாயாக.

நாகத்தைப் போன்ற நீளமான கூந்தல் கொண்டவளே, லட்சுமிதேவியே, நீ மனோ வேகத்தைப் போல வேகமாக வந்து, என்னை காக்க வைக்காமல், என் தலை மேல் கை வைத்து, மிகவும் அன்புடன், என் ஏழ்மையின் துக்கத்தினை நீக்கி, என் சம்சார துக்கம் என்னும் மலையை உடைத்து, நீ என் வீட்டில், தங்க மலைகளை இறக்குவாயாக.

**அஞ்சபே$^{3}$ட$^{3}$வோ வத்ஸா எனுதலி**
**மஞ்சுளோக்திய நுடி$^{3}$து$^{3}$ கருணா**
**புஞ்ச மனத$^{3}$லி ப$^{3}$ந்து$^{3}$ ஶீக்ரதி$^{3}$ கார்ய மாடு$^{3}$வுது$^{3}$**
**கஞ்ஜலோசனெ காமதே$^{4}$னு ஸு**
**ரஞ்ஜிபாமர தருவு எனிஸுவி**
**ஸஞ்ஜயப்ரத$^{3}$ளாகி$^{3}$ ஸந்தத பாஹீ மாம் பாஹி||40**

அஞ்சபேடவோ வத்ஸா எனுதலி - பயப்படாதே மகனே என்றவாறு; மஞ்சுளோக்திய நுடிது - மனதிற்கு இதமான வசனங்களை சொல்லி; கருணா புஞ்ச மனதலி பந்து - கருணையுடன் கூடிய மனதுடன் வந்து; ஷீக்ரதி கார்ய மாடுவுது - விரைவில் உன் வேலையை செய்வாயாக; கஞ்ஜலோசனெ - தாமரைக் கண்களைக் கொண்டவளே; காமதேனு - காமதேனுவே; ஸுரஞ்ஜிபாமர தருவு எனிஸுவி - கல்பவ்ருக்ஷ மரம் எனப்படுகிறாய்; ஸஞ்ஜய ப்ரதளாகி - வரங்களை அருள்பவளாக இருந்து; ஸந்தத பாஹி மாம் பாஹி - எப்போதும் என்னை அருள்வாயாக.

பயப்படாதே மகனே என்றவாறு, மனதிற்கு இதமான வசனங்களை சொல்லி, கருணையுடன் கூடிய மனதுடன் வந்து, விரைவில் உன் வேலையை செய்வாயாக. தாமரைக் கண்களைக் கொண்டவளே, காமதேனுவே, கல்பவ்ருக்ஷ மரம் எனப்படுகிறாய். வரங்களை அருள்பவளாக இருந்து, எப்போதும் என்னை அருள்வாயாக.

**தே$^{3}$வி ஶீக்$^{4}$ரதி$^{3}$ ப$^{3}$ந்து$^{3}$ பூ$^{4}$மி**
**தே$^{3}$வி ஸம்ப$^{4}$வெ என்ன ஜனநியெ**
**காமனய்யன ராணி நின்னய ப்$^{4}$ருத்ய நானெந்து$^{3}$**
**பா$^{4}$விஸீபரி நின்ன புடு$^{3}$கி$^{1}$தெ$^{3}$**
**ஸேவெ நீ கைகொண்டு$^{3}$ மன்மனோ**
**பா$^{4}$வ பூர்த்திஸி கருணிஸென்னனு ஶரணு ஶரணெம்பே$^{3}$ ||41**

தேவி – ஹே தேவியே. ஷீக்ரதி பந்து – உடனடியாக வந்து; பூமி தேவி – பூதேவியே; ஸம்பவெ என்ன ஜனநியே – என்னை பெற்றெடுத்த என் தாயே; காமனய்யன ராணி – மன்மதனின் தந்தையான ஸ்ரீஹரியின் ராணியே; நின்னய ப்ருத்ய நானெந்து – உன்னுடைய சேவகன் நான் என்று; பாவிஸு – நினைத்தவாறு; ஈ பரி நின்ன புடுகிதெ – இவ்வாறாக நான் செய்ததான; ஸேவெ நீ கைகொண்டு – சேவைகளை நீ ஏற்றுக் கொண்டு; மன்மனோ பாவ பூர்த்திஸி – என் மனதின் இஷ்டார்த்தங்களை நீ நிறைவேற்றி; கருணிஸென்னனு – என்னை அருள்வாயாக; ரணு ரணெம்பே – நான் உன்னை வணங்குகிறேன்.

ஹே தேவியே, பூதேவியே, என்னை பெற்றெடுத்த என் தாயே, மன்மதனின் தந்தையான ஸ்ரீஹரியின் ராணியே, உன்னுடைய சேவகன் நான் என்று நினைத்தவாறு, உடனடியாக வந்து, இவ்வாறாக நான் செய்ததான சேவைகளை நீ ஏற்றுக் கொண்டு, என் மனதின் இஷ்டார்த்தங்களை நீ நிறைவேற்றி, என்னை அருள்வாயாக, நான் உன்னை வணங்குகிறேன்.

**ஜாக$^{3}$ரூகதி$^{3}$ நிந்து மத்தே**
**ஜாக$^{3}$ரூகதி$^{3}$ எனகெ$^{3}$ நித்யதி$^{3}$**
**த்யாக$^{3}$போ$^{4}$க்$^{3}$யகெ யோக்$^{3}$யவெனிபா க்ஷய்ய ஹேமமய**
**பூக$^{3}$ கனக ஸம்பூர்ண க$^{4}$ட$^{1}$க$^{3}$ள**
**யோக$^{3}$ மாள்புது$^{3}$ லோகஜனனி**

**ஈக$^{3}$ என்னய பா$^{4}$ர நின்னது$^{3}$ கரெது$^{3}$ கை பிடி$^{3}$யே ||42**

ஜாகரூகதி நிந்து – மிகவும் விழிப்புடன் (கவனமாக) இருந்து; மத்தெ – பிறகு; ஜாகரூகதி எனகெ – மிகவும் கவனமாக எனக்கு; நித்யதி – எப்போதும்; த்யாக போக்யகெ யோக்யவெனிப – போகம் செய்வதற்கு (அனுபவிப்பதற்கு) தகுதியான; அக்ஷய்ய ஹேமமய – எல்லையில்லா தங்கமயமான; பூக கனக – ஏராளமான தங்கங்களால்; ஸம்பூர்ண கடகள – நிறைந்ததான பானைகளை; யோக மாள்புது – எனக்கு அருள்வாயாக; லோகஜனனி – உலகத்தின் தாயே; ஈக என்னய பார நின்னது – இப்போது என்னுடைய பாரம் உன்னுடையது; கரெது கை பிடியெ – என்னை அழைத்து என் கைகளை பிடிப்பாயாக (எனக்கு அருள்வாயாக).

மிகவும் விழிப்புடன் (கவனமாக) இருந்து, பிறகு, மிகவும் கவனமாக எனக்கு எப்போதும் போகம் செய்வதற்கு (அனுபவிப்பதற்கு) தகுதியான, எல்லையில்லா தங்கமயமான, ஏராளமான தங்கங்களால் நிறைந்ததான பானைகளை, எனக்கு அருள்வாயாக. உலகத்தின் தாயே, இப்போது என்னுடைய பாரம் உன்னுடையது. என்னை அழைத்து என் கைகளை பிடிப்பாயாக (எனக்கு அருள்வாயாக).

**த$^{4}$ரணீக$^{3}$த நிக்ஷேபக$^{3}$ளனு**
**த்$^{3}$த$^{4}$ரிஸி நீ என்ன முந்தெ$^{3}$ ஸேரிஸி**
**கி$^{1}$ரிய நகெ$^{3}$மொக$^{3}$தி$^{3}$ந்த$^{3}$ நோடு$^{3}$த நீடு$^{3}$ நவநிதி$^{4}$ய**
**ஸ்தி$^{2}$ரதி$^{3}$ என மந்தி$^{3}$ரதி$^{3}$ நிந்து$^{1}$**
**பரம மங்க$^{3}$ளகார்ய மாடி$^{3}$ஸு**
**ஸிரியெ நீனெ ஒலிது$^{3}$ பாலிஸு மோக்ஷ ஸுக$^{2}$ கொனெகெ$^{3}$ ||43**

தரணீகத – பூமியில் புதைந்திருப்பதான; நிக்ஷேபகளனு உத்தரிஸி – புதையல்களை எடுத்து; நீ என்ன முந்தெ ஸேரிஸி – நீ அவற்றை என் முன் வைத்து; கிரிய நகெமொகதிந்த – புன்னகையுடன் கூடிய முகத்துடன்; நோடுத – பார்த்தவாறு; நீடு நவநிதிய – அனைத்து நவநிதிகளையும் வழங்குவாயாக; ஸ்திரதி என மந்திரதி நிந்து– என் வீட்டில் (மனதில்) நிலையாக நின்று; பரம மங்களகார்ய மாடிஸு – அபாரமான மங்கள காரியங்களை செய்விப்பாயாக; ஸிரியெ நீனெ ஒலிது பாலிஸு – ஸ்ரீதேவியே

நீயே மகிழ்ந்து அருள்வாயாக; மோக்ஷ ஸுக கொனெகெ – கடைசியில் மோட்ச சுகத்தையும் அருள்வாயாக.

பூமியில் புதைந்திருப்பதான புதையல்களை எடுத்து, நீ அவற்றை என் முன் வைத்து, புன்னகையுடன் கூடிய முகத்துடன் பார்த்தவாறு, அனைத்து நவநிதிகளையும் வழங்குவாயாக. என் வீட்டில் (மனதில்) நிலையாக நின்று, அபாரமான மங்கள காரியங்களை செய்விப்பாயாக. ஸ்ரீதேவியே, நீயே மகிழ்ந்து அருள்வாயாக. கடைசியில் மோட்ச சுகத்தையும் அருள்வாயாக.

**நில்லே லகுமீ ஸ்தை$^{2}$ர்ய பா$^{4}$வதி$^{3}$**
**நில்லு ரத்ன ஹிரண்ய ரூபளெ**
**எல்ல வரக$^{3}$ளனித்து எனகெ$^{3}$ ப்ரஸன்ன முக$^{2}$ளாகு$^{3}$**
**எல்லோ இருதிஹ கனக நிதி$^{4}$க$^{3}$ள**
**னெல்ல நீ தந்து$^{3}$ நீடு$^{3}$வுதை$^{3}$**
**புல்லலோசனெ தோரி நிதி$^{4}$க$^{3}$ள தந்து$^{3}$ பொரெயம்ம ||44**

நில்லே லகுமி ஸ்தைர்ய பாவதி – ஹே லட்சுமிதேவியே, நீ என் வீட்டில் (மனதில்) வந்து, திடமாக நிலைப்பாயாக; நில்லு ரத்ன ஹிரண்ய ரூபளெ – தங்கமயமானவளே, வந்து நிலைப்பாயாக; எனகெ எல்ல வரகளனித்து – எனக்கு அனைத்து வரங்களையும் அளித்து; ப்ரஸன்ன முகளாகு – மகிழ்ச்சியுடன் என்னை பார்ப்பாயாக; எல்லோ இருதிஹ – எங்கெங்கோ இருக்கும்; கனக நிதிகளனெல்ல – அனைத்து தங்க நிதிகளையும்; நீ தந்து நீடுவுதை – நீ எனக்கு கொண்டு வந்து கொடுப்பாயாக; புல்லலோசனெ – தாமரைக் கண்களைக் கொண்டவளே; நிதிகள தோரி தந்து பொரெயம்ம – அந்த நிதிகளை கொண்டு வந்து கொடுத்து, என்னை அருள்வாயம்மா.

ஹே லட்சுமிதேவியே, நீ என் வீட்டில் (மனதில்) வந்து, திடமாக நிலைப்பாயாக. தங்கமயமானவளே, வந்து நிலைப்பாயாக. எனக்கு அனைத்து வரங்களையும் அளித்து, மகிழ்ச்சியுடன் என்னை பார்ப்பாயாக. எங்கெங்கோ இருக்கும் அனைத்து தங்க நிதிகளையும், நீ எனக்கு கொண்டு வந்து கொடுப்பாயாக. தாமரைக்

கண்களைக் கொண்டவளே, அந்த நிதிகளை கொண்டு வந்து கொடுத்து, என்னை அருள்வாயம்மா.

**இந்த்$^3$ரலோகத$^3$லித்$^3$த$^3$ தெரத$^3$லி**
**நிந்த்$^3$ரு என்னய க்$^3$ருஹதி$^3$ நித்யதி$^3$**
**சந்த்$^3$ரவத$^3$னெயெ லகுமி தே$^3$வி நீடெ$^3$ எனக$^3$ப$^4$யா**
**நிந்த்$^3$ரலாரெனு ருணத$^3$ பா$^3$தெ$^4$கெ$^3$**
**தந்த்$^3$ரமதி நானாதெ$^3$ ப$^4$வதொ$^3$ளு**
**பேந்த்$^3$ர வல்லபெ$^4$ அப$^4$ய பாலிஸு நமிபெ மஜ்ஜனனி ||45**

இந்த்ரலோகதலித்த தெரதலி – நீ எப்படி எப்போதும் இந்திரலோகத்தில் இருக்கிறாயோ, அதைப் போலவே; நிந்த்ரு என்னய க்ருஹதி நித்யதி – என் வீட்டிலும் எப்போதும் நிலைத்திருப்பாயாக; சந்த்ரவதனெயெ – சந்த்ரனைப் போல ஒளி பொருந்திய முகத்தைக் கொண்டவளே; லகுமி தேவி – லட்சுமிதேவியே; நீடெ எனகபய – எனக்கு அபயம் அளிப்பாயாக; நிந்த்ரலாரெனு ருணத பாதெகெ – என் செய்ய வேண்டிய கடமைகளை செய்யாமல் விட்டு, அதனால் வந்த கஷ்டங்களை தாங்க முடியாமல் இருக்கிறேன்; தந்த்ரமதி நானாதெ பவதொளு – நான் மிகவும் சோர்வுற்றிருக்கிறேன் (துன்பப்படுகிறேன்); உபேந்த்ர வல்லபெ – உபேந்திர நாமக ஸ்ரீஹரியின் தலைவியே; அபய பாலிஸு – எனக்கு அபயம் அளிப்பாயாக; நமிபெ மஜ்ஜனனி – உன்னை நான் வணங்குகிறேன், என் தாயே.

நீ எப்படி எப்போதும் இந்திரலோகத்தில் இருக்கிறாயோ, அதைப் போலவே, என் வீட்டிலும் எப்போதும் நிலைத்திருப்பாயாக. சந்த்ரனைப் போல ஒளி பொருந்திய முகத்தைக் கொண்டவளே, லட்சுமிதேவியே, எனக்கு அபயம் அளிப்பாயாக. நான் செய்ய வேண்டிய கடமைகளை செய்யாமல் விட்டு, அதனால் வந்த கஷ்டங்களை தாங்க முடியாமல் இருக்கிறேன். நான் மிகவும் சோர்வுற்றிருக்கிறேன். (துன்பப்படுகிறேன்), உபேந்திர நாமக ஸ்ரீஹரியின் தலைவியே, எனக்கு அபயம் அளிப்பாயாக, உன்னை நான் வணங்குகிறேன், என் தாயே.

**பத்3த3 ஸ்னேஹ விராஜமானளெ**
**ஶுத்3த4 ஜாம்பூ3னத3தி3 ஸம்ஸ்தி2தெ**
**முத்3து3 மோஹன மூர்த்தி கருணதி3 நோடெ3 நீ என்ன**
**பி3த்3தெ3 நா நின்ன பாத3 பது3மகெ**
**உத்3த3ரிபுதெ3ந்து3 பே3டி3தே3 அனி**
**ருத்3த3 ராணி க்ருபாகடாக்ஷதி3 நோடெ3 மாதாடே3 ||46**

பத்த ஸ்னேஹ விராஜமானளெ – (தூய்மையான) பக்திக்கு கட்டுப்பட்டு (அவனில்) வீற்றிருப்பவளே; ஷுத்த ஜாம்பூனததி ஸம்ஸ்திதெ – தூய்மையான தங்கமயமான ஆபரணங்களைக் கொண்டு அலங்கரித்திருப்பவளே; முத்து மோகன மூர்த்தி – பார்ப்பதற்கு மிகவும் அழகான மூர்த்தியே; கருணதி நோடெ நீ என்ன – என்னை மிகவும் கருணையுடன் பார்ப்பாயாக; நா நின்ன பாத பதுமகெ பித்தெ – நான் உன் பாத பத்மங்களில் விழுந்தேன்; உத்தரிபுதெந்து பேடிதெ – என்னை உத்தரிக்க வேண்டும் என்று வேண்டினேன்; அனிருத்த ராணி – அனிருத்தனின் ராணியே; க்ருபாகடாக்ஷதி நோடெ மாதாடெ – என்னை உன் கருணைப் பார்வையினால் பார்ப்பாயாக, என்னிடம் பேசுவாயாக.

(தூய்மையான) பக்திக்கு கட்டுப்பட்டு (அவனில்) வீற்றிருப்பவளே, தூய்மையான தங்கமயமான ஆபரணங்களைக் கொண்டு அலங்கரித்திருப்பவளே, பார்ப்பதற்கு மிகவும் அழகான மூர்த்தியே, என்னை மிகவும் கருணையுடன் பார்ப்பாயாக. நான் உன் பாத பத்மங்களில் விழுந்தேன். என்னை உத்தரிக்க வேண்டும் என்று வேண்டினேன். அனிருத்தனின் ராணியே, என்னை உன் கருணைப் பார்வையினால் பார்ப்பாயாக, என்னிடம் பேசுவாயாக.

**பூ4மி க3த ஸிரிதே3வி ஶோபி4தெ**
**ஹேமமயெ எல்லெல்லு இருதிஹ**
**தாமரஸ ஸம்பூ4தெ நின்னய ரூப தோரெனகெ3**
**பூ4மியலி ப3ஹு ரூபதி3ந்த3லி**
**ப்ரேமபூர்வக க்ரீடெ3கெ3ய்யுத**
**ஹேமமய பரிபூர்ண ஹஸ்தவ ஶிரத3 மேலிரிஸு ||47**

பூமிகத ஸிரிதேவி ஷோபிதெ – பூமியில் நிலைத்திருப்பவளான, ஒளிர்பவளான, ஸ்ரீதேவியே; ஹேமமயெ – தங்கமயமானவளே;

எல்லெல்லு இருதிஹ தாமரஸ ஸம்பூதெ – அனைத்து இடங்களிலும் இருப்பதான தாமரையில் நிலைத்திருப்பவளே; நின்னய ரூப தோரெனகெ – உன்னுடைய ரூபத்தை எனக்கு காட்டுவாயாக; பூமியலி – இந்த பூமியில்; பஹு ரூபதிந்தலி – பற்பல ரூபங்களில்; ப்ரேமபூர்வக – மிகவும் அன்புடன்; க்ரீடெகெய்யுத – உன் லீலைகளை செய்தவாறு; ஹேமமய – தங்கமயமான; பரிபூர்ண ஹஸ்தவ – உன்னுடைய அருள்வதான கரங்களை; ஷிரத மேலிரிஸு – என் தலை மேல் வைத்து அருள்வாயாக.

பூமியில் நிலைத்திருப்பவளான, ஒளிர்பவளான, ஸ்ரீதேவியே. தங்கமயமானவளே, அனைத்து இடங்களிலும் இருப்பதான தாமரையில் நிலைத்திருப்பவளே, உன்னுடைய ரூபத்தை எனக்கு காட்டுவாயாக. இந்த பூமியில், பற்பல ரூபங்களில், மிகவும் அன்புடன், உன் லீலைகளை செய்தவாறு, தங்கமயமான உன்னுடைய அருள்வதான கரங்களை, என் தலை மேல் வைத்து அருள்வாயாக.

**ப[4]லக[3]ளீவ ஸுபா[4]க்[3]ய லகுமியே**
**லலித ஸர்வ புராதி[4] வாஸியெ**
**கலுஷ ஶூன்யளெ லகுமி தே[3]வியே பூர்ண மாடெ[3]ன்ன**
**குலஜெ குங்கும ஶோபி[4]பாலளெ**
**சலித குண்ட[3]ல கர்ண பூ[4]ஷிதெ**
**ஜலஜலோசனெ ஜாக்[3]ர காலதி[3] ஸலிஸு எனகி[3]ஷ்ட ||48**

பலகளீவ ஸுபாக்ய லகுமியெ – (தன்னை வணங்கும் பக்தர்களுக்கு) பலன்களைக் கொடுக்கும் ஸௌபாக்ய லட்சுமியே; லலித – அழகானவளே; ஸர்வ புராதி வாஸியெ – அனைத்து இடங்களிலும் வ்யாபித்திருப்பவளே; கலுஷ ஷூன்யளெ – தோஷங்கள் அற்றவளே; லகுமி தேவியே – ஸ்ரீலட்சுமி தேவியே; பூர்ண மாடென்ன – என்னை பூர்ணமானவனாக ஆக்குவாயாக; குலஜெ – உத்தமளே; குங்கும ஷோபிபாலளெ – குங்குமம் தரித்து ஒளிர்பவளே; சலித குண்டல கர்ண பூஷிதெ – ஆடும் குண்டலங்களை தரித்த காதுகளைக் கொண்டவளே; ஜலஜலோசனெ – தாமரைக் கண்களை கொண்டவளே; ஜாக்ர

காலதி - நான் விழித்திருக்கும் வேளையில் (இப்போதே); ஸலிஸு எனகிஷ்ட - எனக்கு என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுவாயாக.

(தன்னை வணங்கும் பக்தர்களுக்கு) பலன்களைக் கொடுக்கும் ஸௌபாக்ய லட்சுமியே, அழகானவளே, அனைத்து இடங்களிலும் வ்யாபித்திருப்பவளே, தோஷங்கள் அற்றவளே, ஸ்ரீலட்சுமி தேவியே, என்னை பூர்ணமானவனாக ஆக்குவாயாக. உத்தமளே, குங்குமம் தரித்து ஒளிர்பவளே, ஆடும் குண்டலங்களை தரித்த காதுகளைக் கொண்டவளே, தாமரைக் கண்களை கொண்டவளே, நான் விழித்திருக்கும் வேளையில் (இப்போதே), எனக்கு என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுவாயாக.

**தாயெ செந்த$^3$த$^3$லந்த$^3$யோத்$^4$யதி$^3$**
**த$^3$யதி$^3$ நீனெ நிந்து பட்டண**
**ப$^4$யவ ஓடி$^3$ஸி ஜாகு$^3$ மாட$^3$தெ$^3$ மத்தெ முத$^3$தி$^3$ந்த$^3$**
**ஜயவ நீடி$^3$த$^3$ தெரதி$^3$ என்னா**
**லயதி$^3$ ப்ரேமதி$^3$ ப$^3$ந்து$^3$ கூட்$^3$வது$^3$**
**ஜயப்ரதா$^3$யினி விவித$^4$ வைப$^4$வதி$^3$ந்த$^3$ ஒட$^3$கூ$^3$டி$^3$ ||49**

தாயே - ஹே லட்சுமிதேவியே; செந்ததி - அற்புதமாக; அந்து - அன்று; அயோத்யதி - அயோத்தியில்; தயதி நீனெ நிந்து - நீயே கருணையுடன் நின்று; ஜாகு மாடதெ - எவ்வித தாமதமும் இன்றி; பட்டண பயவ ஓடிஸி - பட்டணத்திற்கு வந்த பயங்களை / பிரச்னைகளை தூர ஓட்டி; மத்தெ முததிந்த - மறுபடி மகிழ்ச்சியுடன்; ஜயவ நீடித தெரதி - அந்த நகரத்திற்கு வெற்றியை தேடிக் கொடுத்ததைப் போல; என்னாலயதி - என்னுடைய வீட்டில் (மனதில்); ப்ரேமதி பந்து கூட்வது - அன்புடன் வந்து அமரவேண்டும்; விவித வைபவதிந்த ஒடகூடி - பற்பல வைபவங்களுடன் சேர்ந்தவாறு; ஜயப்ரதாயினி - ஹே வெற்றியை கொடுப்பவளே.

ஹே லட்சுமிதேவியே, அற்புதமாக, அன்று, அயோத்தியில், நீயே கருணையுடன் நின்று, எவ்வித தாமதமும் இன்றி, பட்டணத்திற்கு வந்த பயங்களை / பிரச்னைகளை தூர ஓட்டி, மறுபடி மகிழ்ச்சியுடன் அந்த நகரத்திற்கு வெற்றியை தேடிக் கொடுத்ததைப்

போல, பற்பல வைபவங்களுடன் சேர்ந்தவாறு, என்னுடைய வீட்டில் (மனதில்), அன்புடன் வந்து அமரவேண்டும். ஹே வெற்றியை கொடுப்பவளே.

**பா$^{3}$ரெ லகுமி என்ன ஸத$^{3}$னகெ**
**ஸாரிதெ$^{3}$னு தவ பாத$^{3}$ பது$^{3}$மகெ**
**தோரி என்னய க்$^{3}$ருஹதி$^{3}$ நீனெ ஸ்தி$^{2}$ரதி$^{3}$ நெலெஸித்து$^{3}$**
**ஸார கருணாரஸவு தும்பி$^{3}$த$^{3}$**
**சாருஜலருஹ நேத்ரயுக்$^{3}$மளெ**
**பாருகா$^{3}$ணிஸு பரம கருணியெ ரிக்ததனதி$^{3}$ந்த$^{3}$ ||50**

பாரெ லகுமி என்ன ஸதனகெ – என் வீட்டிற்கு (மனதில்) வருவாயாக, லட்சுமிதேவியே; தவ பாத பதுமகெ ஸாரிதெனு – நான் உன் பாத பத்மங்களில் விழுந்து வணங்கினேன்; என்னய க்ருஹதி தோரி – என் வீட்டில் (மனதில்) நீயே காட்சியளித்து; நீனெ ஸ்திரதி நெலெஸித்து – நீயே நிலையாக நின்றிருந்து; ஸார கருணாரஸவு தும்பித – முழுமையாக கருணைத் தன்மை நிறைந்ததான; சாருஜலருஹ நேத்ரயுக்மளெ – அழகான தாமரை போன்றதான இரு கண்களை கொண்டவளே; ரிக்ததனதிந்த – என்னுடைய ஏழ்மையிலிருந்து; பாருகாணிஸு – என்னை விடுவிப்பாயாக; பரம க்ருணியெ – கருணைக்கடலே.

என் வீட்டிற்கு (மனதில்) வருவாயாக, லட்சுமிதேவியே. நான் உன் பாத பத்மங்களில் விழுந்து வணங்கினேன். என் வீட்டில் (மனதில்) நீயே காட்சியளித்து, நீயே நிலையாக நின்றிருந்து, முழுமையாக கருணைத் தன்மை நிறைந்ததான, அழகான தாமரை போன்றதான இரு கண்களை கொண்டவளே, என்னுடைய ஏழ்மையிலிருந்து; என்னை விடுவிப்பாயாக. கருணைக்கடலே.

**ஸிரியெ நின்னய ஹஸ்த கமலவ**
**ஶிரதி$^{3}$ நீனே இரிஸி என்னனு**
**கருணவெம்பா$^{3}$ம்ருதத க$^{1}$ணத$^{3}$லி ஸ்னானகெ$^{3}$ய்ஸின்னு**
**ஸ்திரதி ஸ்தி$^{2}$தியனு மாடு$^{3}$ ஸர்வதா$^{3}$**
**ஸர்வ ராஜ க்$^{3}$ருஹஸ்த லகுமியெ**
**த்வரதி$^{3}$ மோத$^{3}$தி$^{3}$ யுக்தளாகி$^{3}$ரு என்ன முந்தி$^{3}$ன்னு ||51**

ஸிரியெ – ஹே லட்சுமிதேவியே; நின்னய ஹஸ்த கமலவ – உன்னுடைய கர கமலங்களை; ஷிரதி நீனே இரிஸி – நீயே என் தலை மேல் வைத்து; என்னனு – என்னை; கருணவெம்பாம்ருதத கணதலி – உன்னுடைய கருணை என்னும் அமிர்தத்தின் கடலில்; ஸ்னானகெய்ஸின்னு – ஸ்னானம் செய்விப்பாயாக; ஸ்திதியனு ஸ்திரதி மாடு – என் நிலையை திடமாக்கச் செய்; ஸர்வதா – எப்போதும்; ஸர்வ ராஜ க்ருஹஸ்த லகுமியெ – அனைத்து ராஜர்களின் வீட்டில் வசிப்பவளான லட்சுமியே; த்வரதி – உடனடியாக; மோததி – மகிழ்ச்சியுடன்; யுக்தளாகிரு என்ன முந்தின்னு – இனி என் முன்னால் இருப்பாயாக.

ஹே லட்சுமிதேவியே, உன்னுடைய கர கமலங்களை, நீயே என் தலை மேல் வைத்து, என்னை, உன்னுடைய கருணை என்னும் அமிர்தத்தின் கடலில் ஸ்னானம் செய்விப்பாயாக. என் நிலையை திடமாக்கச் செய். எப்போதும், அனைத்து ராஜர்களின் வீட்டில் வசிப்பவளான லட்சுமியே, உடனடியாக, மகிழ்ச்சியுடன், இனி என் முன்னால் இருப்பாயாக.

**நீனெ ஆஶீர்வதி$^3$ஸி அப$^4$யவ**
**நீனெ எனகெ$^3$ இத்து ஸாத$^3$ர**
**நீனெ என்ன ஶிரத$^3$லி ஹஸ்தவ இரிஸு கருணத$^3$லி**
**நீனெ ராஜர க்$^3$ருஹத லக்ஷ்மியு**
**நீனெ ஸர்வ ஸுபா$^4$க்$^3$ய லக்ஷ்மியு**
**ஹீனவாக$^3$தெ$^3$ நின்ன களெக$^3$ள வ்ருத்$^3$தி$^3$ மாடி$^3$ன்னு ||52**

நீனெ ஆசீர்வதிஸி – நீயே என்னை ஆசிர்வதித்து; நீனெ எனகெ அபயவ இத்து – நீயே எனக்கு அபயம் அளித்து; ஸாதர – அன்புடன்; நீனெ என்ன ஷிரதலி – நீயே என் தலை மேல்; ஹஸ்தவ இரிஸு கருணதலி – உன் கையை வைத்து (அருள்வாயாக); நீனெ ராஜர க்ருஹத லக்ஷ்மியு – நீயே அரசர்களின் வீட்டில் இருப்பதான லட்சுமிதேவி; நீனெ ஸர்வ ஸுபாக்ய லக்ஷ்மியு – நீயெ அனைத்து பாக்கியங்களையும் அளிக்கும் லட்சுமிதேவி; நின்ன களெகள – உன் களைகளை; ஹீனவாகதெ – குறையின்றி; வ்ருத்தி மாடின்னு – தொடர்ந்து வளர்ப்பாயாக.

நீயே என்னை ஆசிர்வதித்து, நீயே எனக்கு அபயம் அளித்து; அன்புடன் நீயே, என் தலை மேல் உன் கையை வைத்து (அருள்வாயாக). நீயே அரசர்களின் வீட்டில் இருப்பதான லட்சுமிதேவி. நீயே அனைத்து பாக்கியங்களையும் அளிக்கும் லட்சுமிதேவி. உன் களைகளை, என்னிடம் குறையின்றி, தொடர்ந்து வளர்ப்பாயாக.

**ஆதி$^{3}$ ஸிரி மஹாலகுமி விஷ்ணுவின**
**மோத$^{3}$மய வாமாங்க நினக$^{3}$னு**
**வாத$^{3}$ ஸ்வஸ்த$^{2}$ளவெந்து$^{3}$ திளிது$^{3}$ நீனெ நெலெஸித்$^{3}$தீ$^{3}$**
**ஆதி$^{3}$ தே$^{3}$வியெ நின்ன ரூபவ**
**மோத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$லி தோரி எம்மொளு**
**க்ரோத$^{3}$வில்லதெ$^{3}$ நித்ய என்னனு பொரெயெ கருணத$^{3}$லி ||53**

ஆதி ஸிரி மஹாலகுமி – ஆதியில் இருந்தவளான மகாலட்சுமியே; விஷ்ணுவின – விஷ்ணுவின்; மோதமய – மகிழ்ச்சியுடனான; வாமாங்க நினகனுவாத – இடது புறம், உனக்கு தக்கதான; ஸ்வஸ்தளவெந்து திளிது – இருப்பிடம் என்பதை அறிந்து; நீனெ நெலெஸித்தி – நீயே நிலைத்திருந்தாய்; ஆதி தேவியெ – ஆதி தேவியே; மோததிந்தலி – அன்புடன் (மகிழ்ச்சியுடன்); நின்ன ரூபவ – உன்னுடைய ரூபத்தை; எம்மொளு தோரி – என் மனதில் காட்டி (தரிசனம் அளித்து); நித்ய என்னனு – எப்போதும் என்னை; க்ரோதவில்லதெ – என் மேல் கோபம் கொள்ளாமல்; பொரெயெ கருணதலி – என்னை கருணையுடன் அருள்வாயாக.

ஆதியில் இருந்தவளான மகாலட்சுமியே, விஷ்ணுவின் இடது புறம், உனக்கு தக்கதான இருப்பிடம் என்பதை அறிந்து, நீயே மகிழ்ச்சியுடன் நிலைத்திருந்தாய். ஆதி தேவியே, அன்புடன் (மகிழ்ச்சியுடன்), உன்னுடைய ரூபத்தை, என் மனதில் காட்டி (தரிசனம் அளித்து) எப்போதும் என்னை, என் மேல் கோபம் கொள்ளாமல், என்னை கருணையுடன் அருள்வாயாக.

**ஒலியெ நீ மஹாலகுமி பே$^{3}$க$^{3}$னெ**
**ஒலியெ மங்க$^{3}$ளமூர்த்தி ஸர்வதா$^{3}$**
**நலியெ சலிஸதெ$^{3}$ ஹ்ருத$^{3}$ய மந்தி$^{3}$ரத$^{3}$ல்லி நீனிருத**

**லலிதவேத3க3ளெல்லி தனக**
**திளிது3 ஹரிகு3ண பாடு3திர்பவோ**
**ஜலஜலோசன விஷ்ணு நின்னொளு அல்லி நீனிர்பெ ||54**

மஹாலகுமி நீ பேகனெ ஒலியெ – ஹே மகாலட்சுமியே, நீ விரைவாக தரிசனம் அளிப்பாய்; ஒலியெ மங்களமூர்த்தி – மங்களங்களை அருள்பவளே, நீ எனக்கு தரிசனம் அளிப்பாய்; ஸர்வதா சலிஸதெ நலியெ – அங்கும் இங்கும் நகராமல், இருப்பாயாக; ஹ்ருதய மந்திரதல்லி – என் இதயக் கோயிலில்; நீனிருத – நீ இருப்பதான; லலிதவேதகளெல்லி தனக – சிறந்ததான வேதங்கள் எது வரையிலும்; ஹரிகுண திளிது பாடுதிர்பவோ – ஸ்ரீஹரியின் குணங்களை அறிந்து, பாடிக் கொண்டிருக்குமோ; ஜலஜலோசன விஷ்ணு நின்னொளு – தாமரைக் கண்ணனான விஷ்ணு உனக்குள் (உன்னுடன் எதுவரை இருக்கிறானோ); அல்லி நீனிர்பெ – அதுவரை நீயும் எனக்கு அருள்வாய் / தரிசனம் அளிப்பாய் / நீ என் வீட்டில் (மனதில்) இருப்பாய்.

ஹே மகாலட்சுமியே, நீ விரைவாக தரிசனம் அளிப்பாய். மங்களங்களை அருள்பவளே, நீ எனக்கு தரிசனம் அளிப்பாய். அங்கும் இங்கும் நகராமல், என் இதயக் கோயிலில் இருப்பாயாக. நீ இருப்பதான, சிறந்ததான வேதங்கள் எது வரையிலும், ஸ்ரீஹரியின் குணங்களை அறிந்து, பாடிக் கொண்டிருக்குமோ, தாமரைக் கண்ணனான விஷ்ணு உனக்குள் (உன்னுடன் எதுவரை இருக்கிறானோ); அதுவரை நீயும் எனக்கு அருள்வாய் / தரிசனம் அளிப்பாய் / நீ என் வீட்டில் (மனதில்) இருப்பாய்.

**அல்லி பரியந்தரதி3 நின்னய**
**எல்ல களெக3ளு என்ன மனெயலி**
**நில்லிஸீ ஸுக2 வ்ராத நீடு3த ஸர்வகாலத3லி**
**எல்ல ஜனகாஹ்லாத3 சந்தி3ர**
**குல்லதெ3 ரூப4 பக்ஷ தி3னதொ3ளு**
**நில்லத3லெ களெ வ்ருத்3தி3யைது3வ தெரதி3 மாடெ3ன்ன ||55**

அல்லி பரியந்தரதி – அதுவரை; நின்னய எல்ல களெகளு – உன்னுடைய அனைத்து களைகளும்; என்ன மனெயலி – என்

வீட்டில் (மனதில்); நில்லிஸி – நிறுத்தி; ஈ ஸுக வ்ராத நீடுத – இந்த சுக அனுபவங்களை கொடுத்தவாறு; ஸர்வகாலதலி – அனைத்து காலங்களிலும்; எல்ல ஜனகெ ஆஹ்லாத – அனைத்து மக்களுக்கும் குளுமையை / தண்மையை தருவபவனான; சந்திர – சந்திரன்; குல்லதெ ஷுப பக்ஷ தினதொளு – வளர்பிறை நாட்களில் எவ்வித குறைகளும் இன்றி; நில்லதலெ களெ வ்ருத்தியைதுவ தெரதி – தொடர்ந்து தன் ஒளியை வளர்த்துக் கொண்டே செல்வதைப் போல; மாடென்ன – நீ என்னையும் அருள்வாயாக.

அதுவரை, உன்னுடைய அனைத்து களைகளும், என் வீட்டில் (மனதில்) நிறுத்தி, இந்த சுக அனுபவங்களை கொடுத்தவாறு; அனைத்து காலங்களிலும்; அனைத்து மக்களுக்கும் குளுமையை / தண்மையை தருவபவனான; சந்திரன்; வளர்பிறை நாட்களில் எவ்வித குறைகளும் இன்றி; தொடர்ந்து தன் ஒளியை வளர்த்துக் கொண்டே செல்வதைப் போல; நீ என்னையும் அருள்வாயாக.

**ஸிரியெ நீ வைகுண்ட லோகதி$^{3}$**
**ஸிரியெ நீ பால்கட$^{3}$ல மத்$^{4}$யதி$^{3}$**
**இருவ தெரத$^{3}$லி என்ன மனெயொளு விஷ்ணு ஸஹிதாகி$^{3}$**
**நிருத ஞானிய ஹ்ருத$^{3}$ய மத்யதி$^{3}$**
**மிருகு$^{3}$வந்த$^{3}$த$^{3}$லென்ன ஸத$^{3}$னதி$^{3}$**
**ஹரிய ஸஹிததி$^{3}$ நித்ய ராஜிஸு நீடி$^{3}$ காமிதவா ||56**

ஸிரியெ நீ வைகுண்ட லோகதி – ஹே ஸ்ரீலட்சுமியே, நீ வைகுண்டத்தில்; ஸிரியெ நீ பால்கடல மத்யதி – ஹே லட்சுமியே, நீ பாற்கடலில் நடுவில்; இருவ தெரதலி – இருப்பதைப் போல; என்ன மனெயொளு – என் வீட்டில் (மனதில்); விஷ்ணு ஸஹிதாகி – ஸ்ரீவிஷ்ணுவுடன் சேர்ந்து; நிருத ஞானிய ஹ்ருதய மத்யதி – கற்றறிந்த ஞானிகளின் இதய மத்யத்தில்; மிருகுவந்ததலென்ன ஸதனதி – நிலைத்திருப்பதைப் போலவே, என் வீட்டிலும்; ஹரிய ஸஹிததி – ஸ்ரீஹரியுடன்; காமிதவா நீடி – என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றியவாறு; நித்ய ராஜிஸு – எப்போதும் நிலைத்திருப்பாயாக.

ஹே ஸ்ரீலட்சுமியே, நீ வைகுண்டத்தில் இருப்பதைப் போல, ஹே லட்சுமியே, நீ பாற்கடலில் நடுவில் இருப்பதைப் போல, என் வீட்டில் (மனதில்) ஸ்ரீவிஷ்ணுவுடன் சேர்ந்து, கற்றறிந்த ஞானிகளின் இதய மத்யத்தில் நிலைத்திருப்பதைப் போலவே, என் வீட்டிலும், ஸ்ரீஹரியுடன், என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றியவாறு, எப்போதும் நிலைத்திருப்பாயாக.

**ஸ்ரீனிவாஸன ஹ்ருத$^{3}$ய கமலதி$^{3}$**
**நீனெ நிந்திருவந்தெ ஸர்வதா$^{3}$**
**ஆ நாராயண நின்ன ஹ்ருத$^{3}$யதி$^{3}$ இருவ தெரத$^{3}$ந்தெ**
**நீனு நாராயணனு இப்$^{3}$ப$^{3}$ரு**
**ஸானுராக$^{3}$தி$^{3}$ என்ன மனதொ$^{3}$ளு**
**ந்யூனவாக$^{3}$தெ$^{3}$ நிந்து மனோரத$^{2}$ ஸலிஸி பொரெயெந்தெ$^{3}$ ||57**

ஸ்ரீனிவாஸன ஹ்ருதய கமலதி – ஸ்ரீஹரியின் இதய கமலத்தில்; நீனெ நிந்திருவந்தெ – நீ நிலைத்திருப்பதைப் போல; ஸர்வதா – எப்போதும்; ஆ நாராயண – அந்த நாராயணன்; நின்ன ஹ்ருதய்தி இருவ தெரதந்தெ – உன் இதயத்தில் இருப்பதைப் போல; நீனு நாராயணனு இப்பரு – நீ மற்றும் நாராயணன் இருவரும்; ஸானுராகதி – அன்புடன்; என்ன மனதொளு – என் மனதில்; ந்யூனவாகதெ நிந்து – எவ்வித குறைகளும் இன்றி, நிலைத்திருந்து; மனோரத ஸலிஸி – என் மனோரதங்களை நிறைவேற்றி; பொரெயந்தெ – என்னை காப்பாயாக.

ஸ்ரீஹரியின் இதய கமலத்தில் நீ நிலைத்திருப்பதைப் போல, எப்போதும் அந்த நாராயணன், உன் இதயத்தில் இருப்பதைப் போல, நீ மற்றும் நாராயணன் இருவரும் அன்புடன், என் மனதில், எவ்வித குறைகளும் இன்றி, நிலைத்திருந்து, என் மனோரதங்களை நிறைவேற்றி என்னை காப்பாயாக.

**விமலதர விக்$^{3}$ஞான வ்ருத்$^{3}$தி$^{3}$ய**
**கமலெ என்னய மனதி$^{3}$ மாள்புது$^{3}$**
**அமித ஸுக$^{2}$ ஸௌபா$^{4}$க்$^{3}$ய வ்ருத்$^{3}$தி$^{3}$ய மாடு$^{3}$ மந்தி$^{3}$ரதி$^{3}$**
**ரமெயெ நின்னய கருண வ்ருத்$^{3}$தி$^{3}$ய**
**ஸுமனதி$^{3}$ந்த$^{3}$லி மாடு$^{3}$ என்னலி**
**அமரபாத$^{3}$பெ ஸ்வர்ணவ்ருஷ்டிய மாடு$^{3}$ மந்தி$^{3}$ரதி$^{3}$ ||58**

விமலதர – தூய்மையான; விக்ஞான வ்ருத்திய – யதார்த்த ஞானத்தின் வளர்ச்சியை; கமலெ – ஹே லட்சுமியே; என்னய மனதி மாள்புது – என் மனதில் இருக்கச் செய்வாய்; அமித ஸுக – அபாரமான சுகத்தினை; ஸௌபாக்ய – சௌபாக்கியத்தினை; வ்ருத்திய மாடு மந்திரதி – என் வீட்டில் இவற்றை வளர்ப்பாயாக; ரமெயெ – ஹே லட்சுமிதேவியே; நின்னய கருண வ்ருத்திய – உன்னுடைய வளர்வதான கருணையை; ஸுமனதிந்தலி மாடு என்னலி – என் மனதில் வைப்பாயாக; அமரபாதபெ – அழிவில்லாத பாதங்களைக் கொண்டவளே; மந்திரதி – என் வீட்டில்; ஸ்வர்ணவ்ருஷ்டிய மாடு – தங்க மழையை பொழியச் செய்வாயாக.

தூய்மையான, யதார்த்த ஞானத்தின் வளர்ச்சியை, ஹே லட்சுமியே, என் மனதில் இருக்கச் செய்வாய். அபாரமான சுகத்தினை, சௌபாக்கியத்தினை, என் வீட்டில் வளர்ப்பாயாக. ஹே லட்சுமிதேவியே, உன்னுடைய வளர்வதான கருணையை, என் மனதில் வைப்பாயாக. அழிவில்லாத பாதங்களைக் கொண்டவளே. என் வீட்டில், தங்க மழையை பொழியச் செய்வாயாக.

**என்ன த்யஜனவ மாட$^{3}$தி$^{3}$ரு ஸுர**
**ரன்னெ ஆஶ்ரித கல்பபூஜளெ**
**முன்ன ப$^{4}$க்தர சிந்தாமணி ஸுரதே$^{4}$னு நீனம்ம**
**க$^{4}$ன்ன விஶ்வத மாதெ நீனெ ப்ர**
**ஸன்னளாகி$^{3}$ரு என்ன ப$^{4}$வனதி$^{3}$**
**ஸன்னுதாங்கி$^{3}$யே புத்ர மித்ர களத்ர ஜன நீடெ$^{3}$ ||59**

என்ன த்யஜனவ மாடதிரு – ஹே லட்சுமியே, என்னை புறக்கணித்து விடாதே (மறந்து விடாதே). ரன்னெ – மகாமகிமைகள் பொருந்தியவளே; ஸுர ஆஸ்ரித கல்பபூஜளெ – அனைத்து தேவர்களாலும், அனைத்து கல்பங்களிலும் பூஜிக்கப்படுபவளே; முன்ன பக்தர – பக்தர்களின்; சிந்தாமணி ஸுரதேனு நீனம்ம – நீயே அவர்களின் சிந்தாமணி, காமதேனு; கன்ன விஸ்வத மாதெ நீனே – அபாரமான இந்த உலகின் தாய் நீயே; என்ன பவனதி ப்ரஸன்னளாகிரு – என் வீட்டில் நீ வந்து

மகிழ்ந்து இருப்பாய்; ஸன்னுதாங்கியே – வணங்கத்தக்கவளே; புத்ர மித்ர களத்ர ஜன நீடெ – எனக்கு மக்கள், நண்பர்கள், உற்றார் உறவினர் என அனைவரையும் அளிப்பாயாக.

ஹே லட்சுமியே, என்னை புறக்கணித்து விடாதே (மறந்து விடாதே). மகாமகிமைகள் பொருந்தியவளே, அனைத்து தேவர்களாலும், அனைத்து கல்பங்களிலும் பூஜிக்கப்படுபவளே. பக்தர்களின் சிந்தாமணி, காமதேனு நீயே. அபாரமான இந்த உலகின் தாய் நீயே. என் வீட்டில் நீ வந்து மகிழ்ந்து இருப்பாய். வணங்கத்தக்கவளே, எனக்கு மக்கள், நண்பர்கள், உற்றார் உறவினர் என அனைவரையும் அளிப்பாயாக.

**ஆதி$^3$ ப்ரக்ருதியெ பொ$^3$ம்மனாண்ட$^3$கெ**
**ஆதி ஸ்திதி$^2$லய பீ$^3$ஜ பூ$^4$தளெ**
**மோத$^3$ சின்மய கா$^3$த்ரெ ப்ராக்ருத தே$^3$ஹ வர்ஜிதளே**
**வேத$^3$ வேத்$^3$யளெ பொ$^3$ம்மனாண்ட$^3$வ**
**ஆதி$^3$கூர்மத$^3$ ரூபதி$^3$ந்த$^3$லி அ**
**னாதி$^3$காலதி$^3$ பொத்து மெரெவது$^3$ ஏனு சித்ரவிது$^3$ ||60**

ஆதி ப்ரக்ருதியெ – ஆதியில் இருந்தவளே ப்ரக்ருதியே, பொம்மனாண்டகெ – இந்த பிரம்மாண்டத்திற்கு; ஆதி ஸ்திதிலய பீஜ பூதளெ – ஸ்திதி, லயங்களுக்கு காரணமாக இருப்பவளே; மோத சின்மய காத்ரெ – மகிழ்ச்சியை தரக்கூடியதான சின்மயாத்மகமான தேகத்தை கொண்டவளே; ப்ராக்ருத தேஹ வர்ஜிதளெ – ப்ராக்ருதமான தேகம் இல்லாதவளே; வேத வேத்யளெ – வேதங்களால் போற்றப்படுபவளே; பொம்மனாண்டவ – இந்த பிரம்மாண்டத்தை; ஆதிகூர்மத ரூபதிந்தலி – ஆதி கூர்மத ரூபதிந்தலி – ஆதி கூர்மத்தின் ரூபத்தில்; அனாதிகாலதி – ஆதி அனந்த காலங்களில்; பொத்து மெரெவது – நீ தாங்கிக் கொண்டிருக்கிறாய்; ஏனு சித்ரவிது – இது என்ன ஆச்சரியம்?.

ஆதியில் இருந்தவளே, ப்ரக்ருதியே, இந்த பிரம்மாண்டத்திற்கு, ஸ்திதி, லயங்களுக்கு காரணமாக இருப்பவளே, மகிழ்ச்சியை தரக்கூடியதான சின்மயாத்மகமான தேகத்தை கொண்டவளே, ப்ராக்ருதமான தேகம் இல்லாதவளே. வேதங்களால்

போற்றப்படுபவளே. இந்த பிரம்மாண்டத்தை, ஆதி கூர்மத்தின் ரூபத்தில், ஆதி அனந்த காலங்களில் நீ தாங்கிக் கொண்டிருக்கிறாய். இது என்ன ஆச்சரியம்?.

**வேத$^3$ மொத$^3$லு ஸமஸ்த ஸுரரு**
**வேத$^3$ ஸ்தோமக$^3$ளிந்த$^3$ நின்ன அ**
**கா$^3$த$^4$ மஹிமெய பொக$^3$ளலெந்த$^3$ரெ ஶக்தரவரல்ல**
**ஓது$^3$பார$^3$த$^3$ மந்த$^3$மதி நா**
**நாத$^3$ காரண ஶக்தியில்லவு**
**போ$^3$த$^4$தா$^3$யகெ நீனெ ஸ்தவனவ கெ$^3$ய்ஸு என்னிந்த$^3$ ||61**

வேத மொதலு – வேதங்கள் மற்றும்; ஸமஸ்த ஸுரரு – அனைத்து தேவர்களும்; வேத ஸ்தோமகளிந்த – வேத மந்திரங்களால்; நின்ன அகாத மஹிமெய – உன்னுடைய அபாரமான மகிமைகளை; பொகளலெந்தரெ – புகழ வேண்டும் என்று நினைத்தால்; ஷக்தரவரல்ல – அது அவர்களால் முடிவதில்லை; நானு ஓதுபாரத மந்தமதி – நான் எதுவும் அறியாத மந்தமதி; ஆத காரண – ஆகையால், எனக்கு; ஷக்தியில்லவு – அந்த சக்தியே இல்லை; போததாயகெ நீனெ – ஞானத்தை அளிப்பவளான தாயே, நீயே; ஸ்தவனவ கெய்ஸு என்னிந்த – என் மூலமாக உன்னுடைய புகழை பாடச் செய்வாயாக.

வேதங்கள் மற்றும் அனைத்து தேவர்களும், வேத மந்திரங்களால், உன்னுடைய அபாரமான மகிமைகளை புகழ வேண்டும் என்று நினைத்தால், அது அவர்களால் முடிவதில்லை. நான் எதுவும் அறியாத மந்தமதி. ஆகையால், எனக்கு அந்த சக்தியே இல்லை. ஞானத்தை அளிப்பவளான தாயே, நீயே, என் மூலமாக உன்னுடைய புகழை பாடச் செய்வாயாக.

**மந்த$^3$ நிந்த$^3$லி ஸுகு$^3$ண வ்ருந்த$^3$வ**
**சந்த$^3$த$^3$லி நீ நுடி$^3$ஸி என்னய**
**மந்த$^3$மதியனு தரிது$^3$ நிர்மல ஞானியெந்தெ$^3$னிஸு**
**இந்தி$^3$ரே தவ பாத$^3$பது$^3$மத$^3$**
**த்$^3$வந்த்$^3$வ ஸ்துதிஸுவ ஶகுதி இத்$^3$து$^3$**
**குந்து$^3$ பா$^3$ரத$^3$ கவிதெ பேளிஸு எந்து$^3$ வந்தி$^3$பெனு ||62**

மந்த நிந்தலி – மந்தமதியான என் மூலமாக; ஸுகுண வ்ருந்தவ – அற்புதமான பாடல்களை; சந்ததலி நீ நுடிஸி – அற்புதமாக நீ நுடிக்கச் செய்து; என்னய மந்தமதியனு தரிது – என்னுடைய மந்தமதியினை ஓட்டி; நிர்மல ஞானியெந்தெனிஸு – என்னை யதார்த்த ஞானம் கொண்ட ஞானி என்று ஆக்குவாயாக; இந்திரெ – ஹே லட்சுமியே; தவ பாதபதுமத த்வந்த்வ – உன்னுடைய இரு பாத பத்மங்களை; ஸ்துதிஸுவ – வணங்கும்; ஷகுதி இத்து – சக்தியை எனக்குக் கொடுத்து; குந்து பாரத – எவ்வித குறைகளும் இல்லாததான; கவிதெ பேளிஸு – கவிதையை இயற்றச் செய்வாயாக; எந்து வந்திபெனு – என்று நான் உன்னை வேண்டிக் கொள்கிறேன்.

மந்தமதியான என் மூலமாக, அற்புதமான பாடல்களை, அற்புதமாக நீ நுடிக்கச் செய்து, என்னுடைய மந்தமதியினை ஓட்டி, என்னை யதார்த்த ஞானம் கொண்ட ஞானி என்று ஆக்குவாயாக. ஹே லட்சுமியே, உன்னுடைய இரு பாத பத்மங்களை வணங்கும் சக்தியை எனக்குக் கொடுத்து, எவ்வித குறைகளும் இல்லாததான கவிதையை இயற்றச் செய்வாயாக என்று நான் உன்னை வேண்டிக் கொள்கிறேன்.

**வத்ஸன்வசனவ கேளே நீ ஸிரி**
**வத்ஸலாஞ்சன வக்ஷமந்தி[3]ரெ**
**து[1]ச்ச மாட[3]தெ[3] மனகெ தந்து[3] நீனெ பாலிபுது[3]**
**ஸ்வச்சவாகி[3]ஹ ஸகல ஸம்பத[3]**
**உத்ஸாஹதி[3] நீ நீடி[3] மன்மனோ**
**இச்செ பூர்த்திஸு ஜனனி பே[3]டு[3]வெ நீனெ ஸர்வக்[3]ஞெ ||63**

வத்ஸன்வசனவ கேளே – உன்னுடைய மகனின் பிரார்த்தனையை கேட்பாயாக; நீ ஸிரிவத்ஸலாஞ்சன வக்ஷமந்திரெ – தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரியின் மார்பில் வசிப்பவளே; துச்ச மாடதெ – என்னை புறக்கணிக்காமல்; மனகெ தந்து – என்னை உன் மனதில் நினைத்து; நீனெ பாலிபுது – என்னை காப்பாயாக; ஸ்வச்சவாகிஹ – தூய்மையானதான; ஸகல ஸம்பத – அனைத்து செல்வங்களையும்; உத்ஸாலதி நீ நீடி – மிகவும் உற்சாகத்துடன் நீ எனக்கு அருளி; மன்மனோ இச்செ பூர்த்திஸு – என்

இஷ்டார்த்தங்களை நீ எனக்கு அருள்வாயாக; ஜனனி – தாயே; பேடுவே, நீனெ ஸர்வக்ஞெ – ஹே ஸர்வக்ஞளே, நான் உன்னை இவ்வாறு வேண்டிக் கொள்கிறேன்.

உன்னுடைய மகனின் பிரார்த்தனையை கேட்பாயாக. தாமரைக் கண்ணனான ஸ்ரீஹரியின் மார்பில் வசிப்பவளே, என்னை புறக்கணிக்காமல், என்னை உன் மனதில் நினைத்து என்னை காப்பாயாக. தூய்மையானதான, அனைத்து செல்வங்களையும், மிகவும் உற்சாகத்துடன் நீ எனக்கு அருளி, என் இஷ்டார்த்தங்களை நீ எனக்கு அருள்வாயாக. தாயே, ஹே ஸர்வக்ஞளே, நான் உன்னை இவ்வாறு வேண்டிக் கொள்கிறேன்.

**நின்ன மொரெயனுயெய்தி3 பூர்வதி3**
**த4ன்யராத3ரு த4ரணியொளகா3**
**பன்ன பாலகெ எந்து3 நின்னனு நம்பி3 மொரஹொக்கெ**
**நின்ன ப4குதக3னந்த ஸௌக்2யவு**
**நின்னலே பரமப4குதி அவனிகெ3**
**நின்ன கருணகெ பாத்ரனாகு3வநெந்து3 ஶ்ருதிஸித்த ||64**

நின்ன மொரெயனு எய்தி – உன்னை வேண்டி, அதன் மூலம் பலன்களைப் பெற்று; தரணியொளகெ – இந்த பூமியில் இருந்தவர்கள்; பூர்வதி தன்யராதரு – முன்னர், தன்யர் ஆயினர்; ஆபன்ன பாலகெ – பக்தர்களை காப்பவளே; எந்து நின்னனு நம்பி – என்று, உன்னை நம்பி; மொரெஹொக்கெ – உன்னிடம் வேண்டுபவனான; நின்ன பகுதகெ – உன்னுடைய பக்தனுக்கு (எனக்கு); அனந்த ஸௌக்யவு – அபாரமான ஸௌக்கியங்கள்; நின்னலெ பரமபகுதி அவனிகெ – உன்னாலேயே அவனுக்கு பரம பக்தி; நின்ன கருணகெ – உன்னுடைய கருணைக்கு; பாத்ரனாகுவனெந்து – அவன் பாத்திரன் ஆகிறான் என்பது; ஸ்ருதிஸித்த – வேதங்களே சொல்வதான உண்மையாகும்.

உன்னை வேண்டி, அதன் மூலம் பலன்களைப் பெற்று, இந்த பூமியில் இருந்தவர்கள், முன்னர், தன்யர் ஆயினர் என்று, பக்தர்களை காப்பவளே, உன்னை நம்பி, உன்னிடம் வேண்டுபவனான, உன்னுடைய பக்தனுக்கு (எனக்கு), அபாரமான

ஸௌக்கியங்கள் (கிடைக்கும்). உன்னாலேயே அவனுக்கு பரம பக்தி, உன்னுடைய கருணைக்கு, அவன் பாத்திரன் ஆகிறான் என்பது, வேதங்களே சொல்வதான உண்மையாகும்.

**நின்ன ப$^{4}$குதிகெ$^{3}$ ஹானி இல்லவு**
**ப$^{3}$ன்ன ப$^{3}$டிஸுவரில்ல எந்தி$^{3}$கு$^{3}$**
**முன்ன ப$^{4}$வப$^{4}$யவில்லவெந்தா$^{3}$ ஶ்ருதியு பேளுவுது$^{3}$**
**என்ன கருணாப$^{3}$லவு அவனலி**
**க$^{4}$ன்னவாகி$^{3}$ இருவுதெ$^{3}$ம்ப$^{3}$**
**நின்ன வசனவ கேளி ஈ க்ஷண ப்ராண த$^{4}$ரிஸிஹெனு ||65**

நின்ன பகுதிகெ – உன் மேல் செய்த பக்திக்கு; ஹானி இல்லவு – எவ்வித குறைகளும் இல்லை; பன்ன படிஸுவரில்ல எந்திகு – என்றும், எத்தகைய கஷ்டமும் படமாட்டார்கள்; முன்ன பவபயவில்லவெந்து – அடுத்து அவர்களுக்கு இந்த சம்சாரத்தின் பிறவியும் இல்லை என்று; ஸ்ருதியு பேளுவுது – ஸ்ருதி சொல்கிறது; என்ன கருணாபலவு – என்னுடைய கருணையின் பலன்; அவனலி கன்னவாகி இருவுதெம்ப – அவனில் அபாரமாக இருக்கிறது என்பதான; நின்ன வசனவ கேளி – உன்னுடைய வசனத்தை கேட்டு; ஈ க்ஷண ப்ராண தரிஸிஹெனு – இந்த நொடியில் நான் உயிருடன் இருக்கிறேன்.

உன் மேல் செய்த பக்திக்கு, எவ்வித குறைகளும் இல்லை. அத்தகையவர்கள், என்றும், எத்தகைய கஷ்டமும் படமாட்டார்கள். அடுத்து அவர்களுக்கு இந்த சம்சாரத்தின் பிறவியும் இல்லை என்று ஸ்ருதி சொல்கிறது. என்னுடைய கருணையின் பலன், அவனில் அபாரமாக இருக்கிறது என்பதான உன்னுடைய வசனத்தைக் கேட்டு, இந்த நொடியில் நான் உயிருடன் இருக்கிறேன்.

**நானு நின்னாதீ$^{3}$ன ஜனனியெ**
**நீனு என்னலி கருண மாள்புது$^{3}$**
**ஹீன ப$^{3}$ட$^{3}$தன தோ$^{3}$ஷ களெது$^{3}$ நீனெ நெலஸித்$^{3}$து$^{3}$**
**மான மனெ த$^{4}$ன தா$^{4}$ன்ய ப$^{4}$குதி**
**ஞான ஸுக$^{2}$ வைராக்$^{3}$ய மூர்த்தி**
**த்$^{4}$யான மானஸ பூஜெ மாடி$^{3}$ஸு நீனெ என்னிந்த$^{3}$ ||66**

ஜனனியெ - ஹே தாயே. நானு நின்னாதீன - நான் உன்னுடைய அதீனமாக இருக்கிறேன். நீனு என்னலி - நீ என்னிடம்; கருண மாள்புது - கருணையை காட்டுவாயாக; ஹீன படதன தோஷ களெது - ஏழ்மை என்பதான என்னுடைய தோஷத்தை களைந்து; நீனெ நெலஸித்து - நீயே என்னில் நிலைத்திருந்து; மான மனெ தன தான்ய பகுதி - வாழ்வதற்கான வீடு, செல்வம், தானியம், பக்தி; ஞான ஸுக வைராக்ய மூர்த்தி - யதார்த்த ஞான, ஸுக, வைராக்கியத்துடனான மூர்த்தி; த்யான மானஸ பூஜெ - தியானம், மானஸ பூஜை ஆகியவற்றை; நீனெ என்னிந்த - நீயே என் மூலமாக; மாடிஸு - செய்விப்பாயாக.

ஹே தாயே. நான் உன்னுடைய அதீனமாக இருக்கிறேன். நீ என்னிடம்; கருணையை காட்டுவாயாக; ஏழ்மை என்பதான என்னுடைய தோஷத்தை களைந்து; நீயே என்னில் நிலைத்திருந்து; வாழ்வதற்கான வீடு, செல்வம், தானியம், பக்தி; யதார்த்த ஞான, ஸுக, வைராக்கியத்துடனான மூர்த்தி; தியானம், மானஸ பூஜை ஆகியவற்றை; நீயே என் மூலமாக; செய்விப்பாயாக.

**நின்ன அந்த:கரணதி$^{3}$ந்த$^{3}$லி**
**முன்ன நானே பூர்ண காமனு**
**இன்னு ஆகு$^{3}$வெ பரம ப$^{4}$க்த குசேலனந்த$^{3}$த$^{3}$லி**
**பி$^{3}$ன்னயிபெ தவ பாத$^{3}$ பத்$^{3}$மகெ**
**ப$^{3}$ன்ன நா பட$^{3}$லாரெ தே$^{3}$வி**
**என்ன நீ கர பிடி$^{3}$து$^{3}$ பாலிஸு ரிக்ததனதி$^{3}$ந்த$^{3}$ ||67**

நின்ன அந்த:கரணதிந்தலி - உன்னுடைய பாசத்தினால் (அருளால்); முன்ன நானே - அடுத்து நானே; பூர்ண காமனு - அனைத்தையும் பெறுவேன்; இன்னு ஆகுவெ - அடுத்து மேலும்; பரம பக்த குசேலனந்ததலி - பரம பக்தனான குசேலனைப் போல; தவ பாத பத்மகெ பின்னயிபெ - உன்னுடைய பாத பத்மங்களில் விழுந்து வணங்குவேன்; பன்ன நா படலாரெ தேவி - (பிறகு) நான் எவ்வித கஷ்டமும் படமாட்டேன், தேவி; என்ன - என்னை; நீ கர பிடிது - நீ கைகளைப் பிடித்து; ரிக்ததனதிந்த - உன்னுடைய அபாரமான மகிமைகளைக் கொண்டு; பாலிஸு - என்னை காப்பாயாக.

உன்னுடைய பாசத்தினால் (அருளால்), அடுத்து நானே அனைத்தையும் பெறுவேன். அடுத்து மேலும், பரம பக்தனான குசேலனைப் போல, உன்னுடைய பாத பத்மங்களில் விழுந்து வணங்குவேன். (பிறகு) நான் எவ்வித கஷ்டமும் படமாட்டேன். தேவியே, என்னை நீ கைகளைப் பிடித்து, உன்னுடைய அபாரமான மகிமைகளைக் கொண்டு என்னை காப்பாயாக.

**க்ஷணவு ஜீவிஸலாரெ நின்னய**
**கருணவில்லதெ$^3$ அவனி தளத$^3$லி**
**க்ஷணிக ப$^2$லக$^3$ள ப$^3$யஸலாரெனெ மோக்ஷ ஸுக$^2$ தா$^3$யெ**
**க$^3$ணனெ மாட$^3$தெ$^3$ நீச தே$^3$வர**
**ஹணிது$^3$ பி$^3$டு$^3$வீபா$^3$தெ$^4$ கொட்டரெ**
**பணவ மாடு$^3$வெ நின்ன ப$^3$ளியலி மித்$^2$யவேனில்ல ||68**

நின்னய கருணவில்லதெ – உன்னுடைய கருணை இல்லாமல்; க்ஷணவு ஜீவிஸலாரெ – நான் ஒரு கணமும் உயிர் வாழ மாட்டேன்; அவனி தளதலி – இந்த பூமியில்; க்ஷணிக பலகள – தற்காலிக சுகங்களை; பயஸலாரெனெ – நான் விரும்ப மாட்டேன்; மோக்ஷ ஸுக தாயெ – மோட்சத்தை அருளும் தாயே; கணனெ மாடதெ – ஒரு கணமும் தாமதிக்காமல்; நீச தேவர – துஷ்ட தேவதைகளை; பாதெ கொட்டரெ – அவர்கள் உன் பக்தர்களுக்கு துன்பம் கொடுத்தால்; ஹணிது பிடுவீ – அவர்களை தண்டிப்பாய்; பணவ மாடுவெ – பந்தயம் கட்டுகிறேன்; நின்ன பளியலி – உன்னிடம்; மித்யவேனில்ல – பொய் (அஞ்ஞானம்) என்று எதுவும் இல்லை.

உன்னுடைய கருணை இல்லாமல், நான் ஒரு கணமும் உயிர் வாழ மாட்டேன். இந்த பூமியில்; தற்காலிக சுகங்களை; நான் விரும்ப மாட்டேன்; மோட்சத்தை அருளும் தாயே; ஒரு கணமும் தாமதிக்காமல்; துஷ்ட தேவதைகளை; அவர்கள் உன் பக்தர்களுக்கு துன்பம் கொடுத்தால்; அவர்களை தண்டிப்பாய்; பந்தயம் கட்டுகிறேன்; உன்னிடம்; பொய் (அஞ்ஞானம்) என்று எதுவும் இல்லை.

**தனயனலி வாத்ஸல்யதி$^3$ந்த$^3$லி**
**ஜனனி ஹாலலி தும்பி$^3$ துளுகுவ**

**ஸ்தனவனித்து ஆத3ரிஸி உணிஸுவ ஜனனி தெரத3ந்தெ**
**நினகெ3 ஸுரரொளு ஸமர காணெனு**
**அனிமிஷேஷர படெ3து3 பாலிபி**
**தி3னதி3னதி3 ஸுக2வித்து பாலிஸு கருண வாரிதி4யெ ||69**

தனயனலி – குழந்தையிடம்; வாத்ஸல்யதிந்தலி – மிகவும் வாஞ்சையுடன்; ஜனனி – தாயானவள்; ஹாலலி தும்பி துளுகுவ – பால் நிரம்பி வழியும்; ஸ்தனவனித்து – தன் முலையை கொடுத்து; ஆதரிஸி உணிஸுவ ஜனனி தெரதந்தெ – குழந்தையை அரவணைத்து பால் கொடுக்கும் தாயைப் போல; நினகெ – உனக்கு; ஸுரரொளு ஸமர காணெனு – தேவதைகளில் சமம் என்று யாரையும் காணேன்; அனிமிசேஷர படெது – பகவந்தனுடன் சேர்ந்து; பாலிபி – காப்பாயாக; தினதினதி ஸுகவித்து – தினம்தோறும் (எப்போதும்) சுகம் அளித்து; பாலிஸு கருண வாரிதியெ – கருணைக்கடலே, என்னை காப்பாயாக.

குழந்தையிடம் மிகவும் வாஞ்சையுடன், பால் நிரம்பி வழியும் தன் முலையை கொடுத்து, குழந்தையை அரவணைத்து பால் கொடுக்கும் தாயைப் போல இருக்கும் உனக்கு, தேவதைகளில் சமம் என்று யாரையும் காணேன். பகவந்தனுடன் சேர்ந்து, என்னை காப்பாயாக. தினம்தோறும் (எப்போதும்) சுகம் அளித்து, கருணைக்கடலே, என்னை காப்பாயாக.

**ஏஸு கல்பதி3 நினகெ3 புத்ரனு**
**ஆஸு கல்பதி3 மாதெ நீனெ**
**லேஷவித3கனுமானவில்லவு ஸகல ஶ்ருதிஸித்3த3**
**லேஸு கருணாஸாரவெனிஸுவ**
**ஸூஸுவாம்ருத தா4ரதி3ந்த3லி**
**ஸோஸினி3ந்தபி4ஷேக கெ3ய்த3பி4லாஷெ ஸலிஸம்ம ||70**

ஏஸு கல்பதி நினகெ புத்ரனு – எவ்வளவு கல்பங்களில் நான் உனக்கு புத்திரனோ; ஆஸு கல்பதி மாதெ நீனெ – அவ்வளவு கல்பங்களிலும் நீயே என் தாய்; லேஷவிதகெ அனுமானவில்லவு – இதில் சிறிதளவும் சந்தேகம் இல்லை; ஸகல ஸ்ருதிஸித்த – அனைத்து ஸ்ருதி வாக்கியங்களும் இதையே சொல்கின்றன; லேஸு கருணாஸாரவெனிஸுவ – உன்னுடைய அபாரமான

கருணையின் ஸாரம் எனப்படும்; ஸூஸுவாம்ருத தாரதிந்தலி - அற்புதமான அம்ருத தாரையினால்; ஸோஸொனிந்த அபிஷேக கெய்து - வடிகட்டியினால் (ஜல்லடை) எனக்கு அபிஷேகம் செய்து; அபிலாஷெ ஸலிஸம்ம - என் விருப்பங்களை நிறைவேற்றுவாயாக, அம்மா.

எவ்வளவு கல்பங்களில் நான் உனக்கு புத்திரனோ, அவ்வளவு கல்பங்களிலும் நீயே என் தாய். இதில் சிறிதளவும் சந்தேகம் இல்லை. அனைத்து ஸ்ருதி வாக்கியங்களும் இதையே சொல்கின்றன. உன்னுடைய அபாரமான கருணையின் ஸாரம் எனப்படும் அற்புதமான அம்ருத தாரையினால், வடிகட்டியினால் (ஜல்லடை) எனக்கு அபிஷேகம் செய்து, என் விருப்பங்களை நிறைவேற்றுவாயாக, அம்மா.

**தோ$^{3}$ஷமந்தி$^{3}$ரனெனிப என்னலி**
**லேஷ புடு$^{3}$கலு கு$^{3}$ணக$^{3}$ளில்ல வி**
**ஶேஷ வ்ருஷ்டி ஸுபாம்ஸு கணக$^{3}$ள க$^{3}$ணனெ ப$^{3}$ஹு ஸுலப$^{4}$**
**ராஶியந்த$^{3}$த$^{3}$லிப்ப என்னக$^{4}$**
**ஸாஸிராக்ஷகஶக்ய எணிஸலு**
**ஏஸு பேளலி தாயே தனயன தப்பு ஸஹிஸம்ம ||71**

தோஷமந்திரனெனிப - தோஷங்களின் இருப்பிடம் எனப்படும்; என்னலி - என்னிடம்; லேஷ புடுகலு குணகளில்ல - எவ்வளவு தேடினாலும் (சிறிதளவுகூட) குணங்கள் இல்லை; விசேஷ வ்ருஷ்டி - சிறப்பான மழைத்துளி, ஸுபாம்ஸு கணகள - மண் துகங்கள் ஆகியவற்றை; கணனெ பஹு ஸுலப - எண்ணுவது மிகவும் சுலபம்; ராஷியந்ததலிப்ப - ஒரு மூட்டை போல இருப்பதான; என்னக - என்னுடைய துன்பங்களை (கஷ்டங்களை); சாஸிராக்ஷகெ அஷக்ய எணிஸலு - ஆயிரம் கண்கள் இருந்தாலும்கூட, அதனை எண்ண முடியாது; ஏஸு பேளலி தாயே - என்ன சொல்வேன் தாயே?; தனயன தப்பு ஸஹிஸம்ம - உன் மகனின் தவறினை மன்னிப்பாயாக.

தோஷங்களின் இருப்பிடம் எனப்படும் என்னிடம், எவ்வளவு தேடினாலும் (சிறிதளவுகூட) குணங்கள் இல்லை. சிறப்பான

மழைத்துளி, மண் துகங்கள் ஆகியவற்றை; எண்ணுவது மிகவும் சுலபம். ஒரு மூட்டை போல இருப்பதான, என்னுடைய துன்பங்களை (கஷ்டங்களை), ஆயிரம் கண்கள் இருந்தாலும்கூட, அதனை எண்ண முடியாது. என்ன சொல்வேன் தாயே?. உன் மகனின் தவறினை மன்னிப்பாயாக.

**பாபிஜனரொளக3க்3ரக3ண்யனு**
**கோப பூரித சித்த மந்தி3ர**
**ஈ பயோஜ ப4வாண்ட3 புடு3கித3ராரு ஸரியில்ல**
**ஶ்ரீபனரஸியெ கேளு தோ3ஷவு**
**லோபவாகு3வ தெரதி3 மாடி3**
**ராபுமாட3தெ3 ஸலஹு ஶ்ரீஹரி ராணி கல்யாணி ||72**

பாபிஜனரொளகெ – பாபிஷ்டர்களில்; அக்ரகண்யனு – நானே முதல்வன்; கோப பூரித – கோபம் (முதலானவை) நிறைந்த; சித்த மந்திர – என் மனது / தேகம்; ஈ பயோஜ பவாண்ட – இந்த பூமியில்; புடுகிதராரு ஸரியில்ல – எங்கு தேடினாலும் யாரும் கிடைக்க மாட்டார்கள்; ஶ்ரீபனரஸியெ கேளு – ஶ்ரீஹரியின் தலைவியே, கேட்பாயாக; தோஷவு – என்னுடைய தோஷங்கள் அனைத்தும்; லோபவாகுவ தெரதி மாடி – அழியுமாறு செய்து; ராபுமாடதெ ஸலஹு – தாமதம் இன்றி உடனடியாக காப்பாயாக; ஶ்ரீஹரி ராணி கல்யாணி – ஶ்ரீஹரியின் ராணியே, கல்யாணியே.

பாபிஷ்டர்களில் நானே முதல்வன். கோபம் (முதலானவை) நிறைந்த என் மனது / தேகம், இந்த பூமியில் எங்கு தேடினாலும் யாரும் கிடைக்க மாட்டார்கள். ஶ்ரீஹரியின் தலைவியே, கேட்பாயாக. என்னுடைய தோஷங்கள் அனைத்தும் அழியுமாறு செய்து, தாமதம் இன்றி உடனடியாக காப்பாயாக. ஶ்ரீஹரியின் ராணியே, கல்யாணியே.

**கருணஶாலியரொளகெ3 நீ ப3லு**
**கருணஶாலியு எந்து3 நின்னய**
**சரணயுக3க3பி4னமிஸி ஸார்தெ3னு பொரெயெ பொரெயெந்து3**
**ஹரண நில்லது3 ஹணவு இல்லதெ3**
**ஶரணரனுதி3ன பொரெவ தே3வி ஸு**
**பரண வாஹன ராணி என்னனு காயெ வரவீயே ||73**

கருணஷாலியரொளகெ – கருணைக்கடல் என்று அழைக்கப்படுபவர்களில்; நீ பலு கருணஷலையு எந்து – நீ மிகவும் சிறந்த கருணைக்கடல் என்று; நின்னய – உன்னுடைய; சரணயுககெ அபினமிஸி – உன்னுடைய பாத கமலங்களில் விழுந்து வணங்கி; ஸார்தெனு – வேண்டினேன்; பொரெயெ பொரெயெந்து – என்னை காப்பாயாக என்று; ஹரண நில்லது ஹணவு இல்லதெ – பணம் (பலன்) கிடைக்காமல் திருடுவது நிற்காது. ஆகவே; ஷரணரனுதின பொரெவ தேவி – உன்னை சரணடைந்தவர்களை எப்போதும் காப்பவளான தேவியே; ஸுபரண வாஹன ராணி – கருட வாகனத்தை கொண்டவளே; என்னனு காயெ வரவீயெ – எனக்கு வரம் அளித்து, காப்பாயாக.

கருணைக்கடல் என்று அழைக்கப்படுபவர்களில், நீ மிகவும் சிறந்த கருணைக்கடல் என்று, உன்னுடைய பாத கமலங்களில் விழுந்து வணங்கி என்னை காப்பாயாக என்று வேண்டினேன். பணம் (பலன்) கிடைக்காமல் திருடுவது நிற்காது. ஆகவே, உன்னை சரணடைந்தவர்களை எப்போதும் காப்பவளான தேவியே, கருட வாகனத்தை கொண்டவளே, எனக்கு வரம் அளித்து, காப்பாயாக.

**உத$^3$ர கர ஶிர டொங்க ஶூலிய**
**மொத$^3$லே ஸ்ருஷ்டியகெ$^3$ய்யதி$^3$ரலௌ**
**ஷ$^4$தத ஸ்ருஷ்டியு வ்யர்த்த$^2$வாகு$^3$வ தெரதி$^3$ ஜக$^3$தொ$^3$ளகே$^3$**
**விதி$^4$யு என்னனு ஸ்ருஜிஸதி$^3$த்$^3$த$^3$ரெ**
**பது$^3$மெ நின்ன த$^3$யாளுதனவு**
**புது$^3$கி$^3$ போதி$^3$து எந்து$^3$ திளிதா$^3$ பொ$^3$ம்ம ஸ்ருஜிஸித$^3$னு ||74**

உதர கர ஷிர டொங்க ஶூலிய மொதலெ – வயிற்று வலி, கைவலி, தலைவலி, இடுப்பு வலி ஆகியவை வருவதற்கு முதலிலேயே; ஸ்ருஷ்டி கெய்யதிரலு – உருவாக்கவில்லை என்றால்; ஔஷதத ஸ்ருஷ்டியு – அதற்கான மருந்தின் ஸ்ருஷ்டி; வ்யர்த்தவாகுவ தெரதி – வீண் ஆகிவிடும், அதைப் போலவே; ஜகதொளகெ – இந்த உலகில்; விதியு என்னனு ஸ்ருஜிஸதித்தரெ – என்னை படைத்திருக்காவிட்டால்; பதுமெ – ஹே தேவியே; நின்ன தயாளுதனவு – உன்னுடைய கருணை உள்ளமானது; புதுகி போதிது – வீணாகி விடும் (பயன்படாமல் போய்விடும்); எந்து

திளிது – என்று அறிந்தவனான; ஆ பொம்ம ஸ்ருஜிஸிதனு – அந்த பிரம்மன், என்னை படைத்தான்.

வயிற்று வலி, கைவலி, தலைவலி, இடுப்பு வலி ஆகியவை வருவதற்கு முதலிலேயே, அதற்கான மருந்தின் ஸ்ருஷ்டி உருவாக்கவில்லை என்றால், அது வீண் ஆகிவிடும். அதைப் போலவே, இந்த உலகில், என்னை படைத்திருக்காவிட்டால், ஹே தேவியே, உன்னுடைய கருணை உள்ளமானது வீணாகி விடும் (பயன்படாமல் போய்விடும்). என்று அறிந்தவனான அந்த பிரம்மன், என்னை படைத்தான்.

**நின்ன கருணவு மொத[3]லொ தே[3]வியெ**
**என்ன ஜனனவு மொத[3]லொ பேள்வது[3]**
**முன்ன இத[3]னனு விசாரகெ[3]ய்து[3]வித்த எனகீ[3]யே**
**க[4]ன்ன கருணாநிதி[2]யு எனுதலி**
**பி[3]ன்னஹவ நா மாடி[3] யாசிபெ**
**இன்னு நிதி[4]யனு இத்து பாலிஸு தூ[3]ர நோட[3]த[3]லே ||75**

நின்ன கருணவு மொதலொ தேவியே – உன்னுடைய கருணை முதலில் தோன்றியதா; என்ன ஜனனவு மொதலொ பேள்வது – என்னுடைய பிறப்பு முதலில் வந்ததா என்று சொல்லவும்; முன்ன இதனனு விசாரகெய்து – முதலில் இதனை சிந்தனை செய்து; வித்த எனகீயெ – எனக்கு செல்வத்தை அருள்வாயாக; கன்ன கருணாநிதியு எனுதலி – அபாரமான கருணைக்கடல் நீ என்று சொல்லி; பின்னஹவ நா மாடி யாசிபெ – வேண்டுகோள் வைத்து நான் உன்னிடம் யாசிப்பேன்; இன்னு நிதியனு இத்து பாலிஸு – எனக்கு தக்க நிதியை அளித்து காப்பாயாக; தூர நோடதலெ – என்னை புறக்கணிக்காமல்.

உன்னுடைய கருணை முதலில் தோன்றியதா, என்னுடைய பிறப்பு முதலில் வந்ததா என்று சொல்லவும். முதலில் இதனை சிந்தனை செய்து, எனக்கு செல்வத்தை அருள்வாயாக. அபாரமான கருணைக்கடல் நீ என்று சொல்லி, வேண்டுகோள் வைத்து நான் உன்னிடம் யாசிப்பேன். என்னை புறக்கணிக்காமல், எனக்கு தக்க நிதியை அளித்து காப்பாயாக.

**தந்தெ$^{3}$ தாயியு நீனெ லகுமி**
**ப$^{3}$ந்து$^{3}$ ப$^{3}$ளக$^{3}$வு நீனே தேவி**
**ஹிந்தெ$^{3}$ முந்தெ$^{3}$ எனகெ$^{3}$ நீனே கு$^{3}$ருவு ஸத்க$^{3}$தியு**
**இந்தி$^{3}$ரெயெ என்ன ஜீவ காரிணி**
**ஸந்தே$^{3}$ஹ எனகி$^{3}$ல்ல பரமா**
**நந்த ஸமுத$^{3}$ய நீடெ கருணவ மாடெ$^{3}$ வர நீடெ$^{3}$ ||76**

தந்தெ தாயியு நீனெ லகுமி – என் தந்தை, தாய் நீயே லட்சுமியே; பந்து பளகவு நீனெ தேவி – என்னுடைய உற்றார் / உறவினர் நீயே; ஹிந்தெ முந்தெ எனகெ நீனெ – எனக்கு முன்னும், பின்னும் (எப்போதும்) நீயே; குருவு ஸத்கதியு – நீயே என்னுடைய குரு மற்றும் ஸத்கதி அளிப்பவளும் நீயே. இந்திரெயெ – ஹே லட்சுமிதேவியே; என்ன ஜீவ காரிணி – நீயே என் வாழ்க்கையின் முக்கிய காரணம்; ஸந்தேஹ எனகில்ல – இதில் எனக்கு எந்த சந்தேகமும் இல்லை; பரமானந்த ஸமுதய நீடெ – எனக்கு அபாரமான மகிழ்ச்சியை கொடுப்பாயாக; கருணவ மாடெ வர நீடெ – எனக்கு கருணையை காட்டுவாயாக, வரங்களை அளிப்பாயாக.

என் தந்தை, தாய் நீயே லட்சுமியே. என்னுடைய உற்றார் / உறவினர் நீயே. எனக்கு முன்னும், பின்னும் (எப்போதும்) நீயே. நீயே என்னுடைய குரு மற்றும் ஸத்கதி அளிப்பவளும் நீயே. ஹே லட்சுமிதேவியே, நீயே என் வாழ்க்கையின் முக்கிய காரணம். இதில் எனக்கு எந்த சந்தேகமும் இல்லை. எனக்கு அபாரமான மகிழ்ச்சியை கொடுப்பாயாக. எனக்கு கருணையை காட்டுவாயாக, வரங்களை அளிப்பாயாக.

**நாத$^{2}$ளெனிஸுவி ஸகல லோககெ**
**க்$^{2}$யாதளெணிஸுவி ஸர்வ காலதி$^{3}$**
**ப்ரீதளாகி$^{3}$ரு எனகெ$^{3}$ ஸகலவு நீனெ நிஜவெந்தெ$^{3}$**
**மாதெ நீனெ எனகெ$^{3}$ ஹரி நிஜ**
**தாத ஈர்வரு நீவெ இரலி**
**ரீதியிந்த$^{3}$லி ப$^{4}$வதி$^{3}$ தொளலிபுதே$^{3}$னு நிம்ம ந்யாய ||77**

ஸகல லோககெ – அனைத்து உலகிற்கும்; நாதளெனிஸுவி – தலைவி எனப்படுகிறாய்; க்யாதளெணிஸுவி – புகழ்பெற்றவள் ஆகிறாய்; ஸர்வ காலதி – அனைத்து காலங்களிலும்; ப்ரீதளாகிரு

– என்னிடம் அன்பு காட்டுவாயாக; எனகெ ஸகலவு நீனெ – எனக்கு அனைத்தும் நீயே; நிஜவெந்தெ – நான் உண்மையே சொல்கிறேன்; மாதெ நீனெ எனகெ – நீயே என் தாய்; ஹரி நிஜ தத – ஶ்ரீஹரியே என்னுடைய தந்தை; ஈர்வரு நீவெ இரலி – நீங்கள் இருவரும் இவ்வாறு எனக்கு இருக்க; ஈ ரீதியிந்தலி – நான் இவ்வாறு; பவதி தொளலிபுது – சம்சார சாகரத்தில் விழுந்து கஷ்டப்படுவது; ஏனு நிம்ம ந்யாய – இது எப்படி சரியாகும்?.

அனைத்து உலகிற்கும்; தலைவி எனப்படுகிறாய். புகழ்பெற்றவள் ஆகிறாய். அனைத்து காலங்களிலும், என்னிடம் அன்பு காட்டுவாயாக. எனக்கு அனைத்தும் நீயே. நான் உண்மையே சொல்கிறேன். நீயே என் தாய். ஶ்ரீஹரியே என்னுடைய தந்தை. நீங்கள் இருவரும் இவ்வாறு எனக்கு இருக்க, நான் இவ்வாறு, சம்சார சாகரத்தில் விழுந்து கஷ்டப்படுவது, இது எப்படி சரியாகும்?.

**ஆதி$^3$ லகுமி ப்ரஸன்னளாகி$^3$ரு**
**மோத$^3$க்$^3$ஞான ஸுபா$^4$க்$^3$ய தா$^4$த்ரியெ**
**சேதிஸஞானாதி$^3$ தோ$^3$ஷவ த்ரிகு$^3$ணவர்ஜிதளே**
**ஸாத$^3$ரதி$^3$ நீ கரெது$^3$ கை பிடி$^3$**
**மாத$^4$வன நிஜ ராணி நமிஸுவெ**
**பா$^3$தெ$^4$ கொ$^3$ளிஸுவ ருணவ களெது$^3$ ஸிரியெ பொரெயெந்தெ$^3$ ||78**

ஆதி லகுமி – ஆதி லட்சுமியே; ப்ரஸன்னளாகிரு – என் மேல் மகிழ்ந்திருப்பாயாக; மோதஞான ஸுபாக்ய தாத்ரியெ – மகிழ்ச்சி, ஞான, பாக்கியம் ஆகியவற்றை கொடுப்பவளே; சேதிஸு அஞ்ஞானாதி தோஷவ – அஞ்ஞானம் முதலான தோஷங்களை அழிப்பாயாக; த்ரிகுண வர்ஜிதளெ – மூன்று குணங்களின் பாதிப்புகளும் இல்லாதவளே; ஸாதரதி நீ கரெது கை பிடி – நீ அன்புடன் என்னை அழைத்து அருள்வாயாக; மாதவன நிஜ ராணி – மாதவனின் நிஜ பத்னியே; நமிஸுவெ – உன்னை வணங்குவேன்; பாதெ கொளிஸுவ – எனக்கு துன்பம் கொடுப்பதான; ருணவ களெது – பிரச்னைகளை விலக்கி; ஸிரியெ பொரெயெந்தெ – ஶ்ரீலட்சுமியே என்னை காப்பாயாக.

ஆதி லட்சுமியே, என் மேல் மகிழ்ந்திருப்பாயாக. மகிழ்ச்சி, ஞான, பாக்கியம் ஆகியவற்றை கொடுப்பவளே, அஞ்ஞானம் முதலான தோஷங்களை அழிப்பாயாக. மூன்று குணங்களின் பாதிப்புகளும் இல்லாதவளே, நீ அன்புடன் என்னை அழைத்து அருள்வாயாக. மாதவனின் நிஜ பத்னியே, உன்னை வணங்குவேன். எனக்கு துன்பம் கொடுப்பதான, பிரச்னைகளை விலக்கி, ஸ்ரீலட்சுமியே என்னை காப்பாயாக.

**வசனஜாட்[3]யவ களெவ தே[3]வியெ**
**எசெயெ நூதன ஸ்பஷ்ட வாக்பத[3]**
**நிசய பாலிஸி என்ன ஜிஹ்வாக்[3]ரத[3]லி நீ நிந்து**
**ரசனெ மாடி[3]ஸு என்ன கவிதெய**
**ப்ரசுரவாகு[3]வ தெரதி[3] மாள்புது[3]**
**உசிதவே ஸரியேனு பேள்வது[3] திளியெ ஸர்வக்[3]ஞெ ||79**

வசனஜாட்யவ களெவ தேவியெ – நாக்கின் குறைகளை போக்கும் தேவியே; நூதன ஸ்பஷ்ட வாக்பத எசெயெ – தெளிவான, சரியான, வாக்கினை எனக்கு அருளி; நிசய பாலிஸி – அது எப்போதும் இருக்குமாறு செய்து; என்ன ஜிஹ்வாக்ரதலி நீ நிந்து – என்னுடைய நாக்கின் முனையில் நீ நின்று; என்ன கவிதெய ரசனெ மாடிஸு – என்னுடைய இந்த கவிதையை இயற்றச் செய்; ப்ரசுரவாகுவ தெரதி மாள்புது – இதனை நல்லபடியாக முடித்து வெளியிடுமாறு செய்வாயாக; உசிதவே ஸரியேனு பேள்வது – நான் உன்னிடம் இவ்வாறு கேட்பது சரிதானே?; திளியெ ஸர்வக்ஞெ – இதனை அறிந்துகொண்டு எனக்கு அருள்வாயாக.

நாக்கின் குறைகளை போக்கும் தேவியே, தெளிவான, சரியான, வாக்கினை எனக்கு அருளி, அது எப்போதும் இருக்குமாறு செய்து, என்னுடைய நாக்கின் முனையில் நீ நின்று, என்னுடைய இந்த கவிதையை இயற்றச் செய். இதனை நல்லபடியாக முடித்து வெளியிடுமாறு செய்வாயாக. நான் உன்னிடம் இவ்வாறு கேட்பது சரிதானே?. இதனை அறிந்துகொண்டு எனக்கு அருள்வாயாக.

**ஸர்வ ஸம்பத[3]தி[3]ந்த[3] ராஜிபெ**
**ஸர்வ தே[3]ஜோராஶிகா[3]ஸ்ரயே**
**ஸர்வருத்தம ஹரிய ராணியெ ஸர்வருத்தமளே**

**ஸர்வ ஸ்த$^{2}$ளத$^{3}$லி தீ$^{3}$ப்யமானளெ**
**ஸர்வ வாக்யக்கெ முக்$^{2}$ய மானியெ**
**ஸர்வ காலத$^{3}$லென்ன ஜிஹ்வதி$^{3}$ நீனே நடிஸுவுது$^{3}$ ||80**

ஸர்வ ஸம்பததிந்த ராஜிபெ – அனைத்து செல்வங்களையும் கொண்டிருப்பவளே; ஸர்வ தேஜோ ராஷிகெ ஆஸ்ரயே – அனைத்து வித தேஜஸ்களுக்கும் கதியே; ஸர்வருத்த ஹரிய ராணியெ – ஸர்வோத்தமனான ஸ்ரீஹரியின் ராணியே; ஸர்வருத்தமளே – ஸர்வோத்தமளே; ஸர்வ ஸ்தளதலி தீப்யமானளெ – அனைத்து இடங்களிலும் வ்யாபித்திருப்பவளே; ஸர்வ வாக்யக்கெ முக்ய மானியெ – அனைத்து வாக்கிற்கும் முக்கிய அபிமானியே; ஸர்வ காலதலென்ன ஜிஹ்வதி – அனைத்து காலங்களிலும் என்னுடைய நாக்கில்; நீனே நடிஸுவுது – நீயே இருந்து என்னை அருள்வாயாக.

அனைத்து செல்வங்களையும் கொண்டிருப்பவளே, அனைத்து வித தேஜஸ்களுக்கும் கதியே. ஸர்வோத்தமனான ஸ்ரீஹரியின் ராணியே, ஸர்வோத்தமளே, அனைத்து இடங்களிலும் வ்யாபித்திருப்பவளே, அனைத்து வாக்கிற்கும் முக்கிய அபிமானியே. அனைத்து காலங்களிலும் என்னுடைய நாக்கில், நீயே இருந்து என்னை அருள்வாயாக.

**ஸர்வ வஸ்த்வபரோக்ஷ மொத$^{3}$லு**
**ஸர்வ மஹாபுருஷார்த்த$^{2}$ தா$^{3}$தளெ**
**ஸர்வகாந்திக$^{3}$ளொளகெ$^{3}$ ஶுப$^{4}$ லாவண்யதா$^{3}$யகளே**
**ஸர்வ காலதி$^{3}$ ஸர்வ தா$^{4}$த்ரியெ**
**ஸர்வ ரீதிலி ஸுமுகி$^{2}$யாகி$^{3}$**
**ஸர்வ ஹேம ஸுபூர்ணெ என்னய நயனதொ$^{3}$ளகெ$^{3}$ஸெயெ ||81**

ஸர்வ வஸ்த்வபரோக்ஷ மொதலு – அனைத்திற்கும் கடைசி நிலையான அபரோக்ஷம் (முக்தி) கிடைக்கும் முன்னர்; ஸர்வ மஹாபுருஷார்த்த தாதளெ – அனைத்து இஷ்டார்த்தங்களையும் நிறைவேற்றுபவளே; ஸர்வ காந்திகளொளகெ – அனைத்து ஒளிகளிலும் சிறந்ததான; ஷுப லாவண்ய தாயகளெ – மங்களகரமான அழகினை கொடுப்பவளே; ஸர்வ காலதி – அனைத்து காலங்களிலும்; ஸர்வ தாத்ரியெ – அனைத்தையும்

அருள்பவளே; ஸர்வ ரீதிலி ஸுமுகியாகி – எப்போதும் சிரித்த முகத்துடன் இருப்பவளே; ஸர்வ ஹேம ஸுபூர்ணெ – தங்கமயமானவளே, பூர்ணளே; என்னய நயனதொளகெஸெயெ – என் கண்ணிற்குள் இருந்து என்னை காப்பாயாக.

அனைத்திற்கும் கடைசி நிலையான அபரோக்ஷம் (முக்தி) கிடைக்கும் முன்னர், அனைத்து இஷ்டார்த்தங்களையும் நிறைவேற்றுபவளே. அனைத்து ஒளிகளிலும் சிறந்ததான, மங்களகரமான அழகினை கொடுப்பவளே. அனைத்து காலங்களிலும், அனைத்தையும் அருள்பவளே. எப்போதும் சிரித்த முகத்துடன் இருப்பவளே, தங்கமயமானவளே, பூர்ணளே, என் கண்ணிற்குள் இருந்து என்னை காப்பாயாக.

**ஸகல மஹாபுருஷார்த்த$^{2}$ தா$^{3}$யினி**
**ஸகல ஜக$^{3}$வனு பெத்த ஜனனியெ**
**ஸகலரீஸ்வரீ ஸகல ப$^{4}$யக$^{3}$ள நித்ய ஸம்ஹாரீ**
**ஸகல ஸ்ரேஷ்டளே ஸுமுகி$^{2}$யாகி$^{3}$**
**ஸகல பா$^{4}$வவ த$^{4}$ரிஸி ஸர்வதா$^{3}$**
**ஸகல ஹேம ஸுபூர்ணெ என்னய நயனதொளகெ$^{3}$ஸெயெ ||82**

ஸகல மஹாபுருஷார்த்த தாயினி – அனைத்து விதமான புருஷார்த்தங்களை அருள்பவளே; ஸகல ஜகவனு பெத்த ஜனனியெ – அனைத்து உலகினையும் பெற்றவளே, தாயே; ஸகலரீஷ்வரி – அனைவரின் தலைவியே; ஸகல பயகள நித்ய ஸம்ஹாரி – அனைத்து வித பயங்களையும் அழிப்பவளே; ஸகல ஸ்ரேஷ்டளெ – ஸர்வோத்தமளே; ஸகல பாவவ தரிஸி – அனைத்து வித பாவங்களையும் கொண்டு; ஸுமுகியாகி – நகைமுகத்துடன் இருப்பவளே; ஸர்வதா – எப்போதும்; ஸகல ஹேம ஸுபூர்ணெ – தங்கமயமானவளே, பூர்ணளே; என்னய நயனதொளகெஸெயெ – என் கண்ணிற்குள் நிலைத்திருந்து, என்னை காப்பாயாக.

அனைத்து விதமான புருஷார்த்தங்களை அருள்பவளே. அனைத்து உலகினையும் பெற்றவளே, தாயே. அனைவரின் தலைவியே, அனைத்து வித பயங்களையும் அழிப்பவளே. ஸர்வோத்தமளே.

அனைத்து வித பாவங்களையும் கொண்டு, நகைமுகத்துடன் இருப்பவளே. எப்போதும் தங்கமயமானவளே, பூர்ணளே. என் கண்ணிற்குள் நிலைத்திருந்து, என்னை காப்பாயாக.

**ஸகல வித4 விக்4னாபஹாரிணி**
**ஸகல ப4க்தோத்3தா3ரகாரிணி**
**ஸகல ஸுக2 ஸௌபா4க்3யதா3யினி நேத்ரதொ3ளகெ3ஸெயெ**
**ஸகல கலெக3ள ஸஹித நின்னய**
**ப4குதனாத3வனெந்து3 ஸர்வதா3**
**வ்யகுதளாகி3ரு என்ன ஹ்ருத3யத3 கமல மத்4யத3லி ||83**

ஸகல வித விக்னாபஹாரிணி – அனைத்து விதமான விக்னங்களையும் போக்குபவளே; ஸகல பக்தோத்தாரகாரிணி – அனைத்து பக்தர்களையும் உத்தாரம் செய்பவளே; ஸகல ஸுக ஸௌபாக்யதாயினி – அனைத்து சுகங்களையும் அருள்பவளே; ஸகல கலெகள ஸஹித – அனைத்து விதமான உன்னுடைய களைகளுடன்; நேத்ரதொளகெஸெயெ – என் கண்ணில் நிலைத்திருப்பாயாக; நின்னய பகுதனாதவனெந்து – நான் உன்னுடைய பக்தன் என்று நினைத்தவாறு; ஸர்வதா வ்யகுதளாகிரு – எப்போதும் என் மனதில் நிலைத்திருப்பாயாக; என்ன ஹ்ருதயத கமல மத்யதலி – என்னுடைய இதய கமலத்தின் நடுவில் நிலைத்திருப்பாயாக.

அனைத்து விதமான விக்னங்களையும் போக்குபவளே, அனைத்து பக்தர்களையும் உத்தாரம் செய்பவளே. அனைத்து சுகங்களையும் அருள்பவளே, அனைத்து விதமான உன்னுடைய களைகளுடன், என் கண்ணில் நிலைத்திருப்பாயாக. நான் உன்னுடைய பக்தன் என்று நினைத்தவாறு, எப்போதும் என் மனதில் நிலைத்திருப்பாயாக. என்னுடைய இதய கமலத்தின் நடுவில் நிலைத்திருப்பாயாக.

**நின்ன கருணா பாத்ரனாகி3ஹ**
**என்ன கோ3ஸுக3 நீனெ த்வரதி3 ப்ர**
**ஸன்னளாக்3யதி4 தே3வக3ணனுதெ ஸுகு3ணெ பரிபூர்ணெ**
**என்ன பெத்திஹ தாயே ஸர்வதா3**
**ஸன்னிஹிதளாகெ3ன்ன மனெயொளு**

**நின்ன பதி ஸஹவாகி$^{3}$ ஸர்வதா$^{3}$ நிலிஸு ஶுப$^{4}$தா$^{3}$யி ||84**

நின்ன கருணா பாத்ரனாகிஹ – உன்னுடைய கருணைக்கு பாத்திரமானவனான; என்ன கோஸுக – எனக்காக; நீனெ த்வரதி ப்ரஸன்னளாக்யதி – நீயே உடனடியாக வந்து தரிசனம் அளிப்பாயாக; தேவகணனுதெ – தேவர்களால் வணங்கப்படுபவளே; ஸுகுணெ பரிபூர்ணெ – நற்குணங்களை கொண்டவளே, பூர்ணளே; என்ன பெத்திஹ தாயே – என்னை பெற்ற தாயே; என்ன மனெயொளு – என் வீட்டில் (மனதில்) நின்ன பதி ஸஹவாகி – உன்னுடைய கணவனான ஸ்ரீஹரியுடன்; ஸர்வதா ஸன்னிஹிதளாகெ – எப்போதும் சேர்ந்து; ஸர்வதா நிலிஸு – எப்போதும் நிலைத்திருப்பாயாக; ஷுபதாயி – மங்களங்களை அருள்பவளே.

உன்னுடைய கருணைக்கு பாத்திரமானவனான எனக்காக, நீயே உடனடியாக வந்து தரிசனம் அளிப்பாயாக. தேவர்களால் வணங்கப்படுபவளே. நற்குணங்களை கொண்டவளே, பூர்ணளே, என்னை பெற்ற தாயே. என் வீட்டில் (மனதில்) உன்னுடைய கணவனான ஸ்ரீஹரியுடன், எப்போதும் சேர்ந்து, எப்போதும் நிலைத்திருப்பாயாக. மங்களங்களை அருள்பவளே.

**என்ன முக$^{2}$த$^{3}$லி நீனெ நிந்து**
**க$^{4}$ன்னனிவனெந்தெ$^{3}$னிஸி லோகதி$^{3}$**
**த$^{4}$ன்ய த$^{4}$ன்யன மாடு$^{3}$ வரக$^{3}$ள நீடு$^{3}$ நலிதா$^{3}$டு$^{3}$**
**அன்ய நா நினக$^{3}$ல்ல தே$^{3}$வீ**
**ஜன்யனாத$^{3}$வனெந்து$^{3}$ திளிது$^{3}$**
**அன்ன வஸனவ தா$^{4}$ன்ய த$^{4}$னவனு நீனே எனகீ$^{3}$யே ||85**

என்ன முகதலி நீனெ நிந்து – என் முகத்தில் நீயே நின்று; லோகதி கன்னனிவனெந்தெனிஸி – உலகில் இவன் சிறந்தவன் என்று நினைத்தவாறு; தன்ய தன்யன மாடு – என்னை தன்யனாக ஆக்குவாயாக; வரகள நீடு நலிதாடு – வரங்களை அளிப்பாயாக, (என்னில்) நிலைத்திருப்பாயாக; நா நினகெ அன்யனல்ல – நான் உனக்கு அன்னியன் அல்ல; தேவி – ஸ்ரீதேவியே; ஜன்யனாதவனெந்து திளிது – நான் உன்னிடமிருந்தே பிறந்தவன் என்பதை அறிந்து; அன்ன வஸனவ – அன்னம், வஸ்திரம்; தான்ய

தனவனு – தானிய, தனம் ஆகியவற்றை; நீனே எனகீயே – நீ எனக்கு அளிப்பாயாக.

என் முகத்தில் நீயே நின்று, உலகில் இவன் சிறந்தவன் என்று நினைத்தவாறு, என்னை தன்யனாக ஆக்குவாயாக. வரங்களை அளிப்பாயாக. (என்னில்) நிலைத்திருப்பாயாக. நான் உனக்கு அன்னியன் அல்ல. ஸ்ரீதேவியே, நான் உன்னிடமிருந்தே பிறந்தவன் என்பதை அறிந்து, அன்னம், வஸ்திரம், தானிய, தனம் ஆகியவற்றை நீ எனக்கு அளிப்பாயாக.

**வத்ஸ கேளலோ அஞ்சபே$^{3}$ட$^{3}$வோ**
**ஸ்வச்ச என்னய கரவ ஶிரத$^{3}$லி**
**இச்செ பூர்வக நீட்$^{3}$தெ$^{3}$ நடி$^{3}$ ஸர்வத்ர நிர்ப$^{4}$யதி$^{3}$**
**உத்ஸஹாத்ம மனோனுகம்பியெ**
**ப்ரோத்ஸஹதி காருண்ய த்$^{3}$ருஷ்டிலி**
**துச்ச மாட$^{3}$தெ$^{3}$ வீக்ஷிஸீக$^{3}$லெ லக்ஷ்மீ ஒலி எனகெ$^{3}$ ||86**

வத்ஸ கேளலோ – ஹே மகனே, கேள்; அஞ்சபேடவோ – பயப்படாதே; என்ன ஷிரதலி – என் தலையில்; ஸ்வச்ச கரவ – உன்னுடைய கரத்தினை; இச்செ பூர்வக நீட்தெ – அன்புடன் வைத்தாய். ஸர்வத்ர நடி நிர்பயதி – அனைத்து இடங்களிலும் பயப்படாமல் சென்று வருவாயாக; உத்ஸஹாத்ம மனோனுகம்பியெ – மனதில் கருணையையும், உற்சாகத்தையும் கொண்டிருப்பவளே; ப்ரோத்ஸஹதி – என்னை உற்சாகப்படுத்தும் விதமாக; காருண்ய த்ருஷ்டிலி – கருணைப் பார்வையில்; துச்ச மாடதெ – என்னை புறக்கணிக்காமல்; வீக்ஷிஸீகலெ – என்னை பார்ப்பாயாக; லட்சுமீ ஒலி எனகெ – லட்சுமிதேவியே எனக்கு தரிசனம் அளிப்பாயாக.

ஹே மகனே, கேள். பயப்படாதே என்று, என் தலையில், உன்னுடைய கரத்தினை அன்புடன் வைத்தாய். அனைத்து இடங்களிலும் பயப்படாமல் சென்று வருவாயாக என்று கூறினாய். மனதில் கருணையையும், உற்சாகத்தையும் கொண்டிருப்பவளே. என்னை உற்சாகப்படுத்தும் விதமாக கருணைப் பார்வையில்

என்னை புறக்கணிக்காமல், என்னை பார்ப்பாயாக. லட்சுமிதேவியே எனக்கு தரிசனம் அளிப்பாயாக.

**முத$^{3}$தி$^{3}$ கருண கடாக்ஷ ஜனரிகெ$^{3}$**
**உத$^{3}$யவாக$^{3}$லு ஸகல ஸம்பத$^{3}$**
**ஒத$^{3}$கி$^{3}$ ப$^{3}$ப்பவு மித்$^{2}$யவல்லவு பு$^{3}$த$^{4}$ர ஸம்மதவு**
**அத$^{3}$கெ நின்னய பத$^{3}$வ நம்பி$^{3}$தெ$^{3}$**
**முத$^{3}$தி$^{3}$ என்னய ஸத$^{3}$னத$^{3}$லி நீ**
**நொத$^{3}$கி$^{3}$ பா$^{4}$க்$^{3}$யத$^{3}$ நிதி$^{4}$ய பாலிஸு பது$^{3}$மெ நமிஸுவெனு ||87**

கருண கடாக்ஷ முததி – உன்னுடைய கருணைப் பார்வையினால் மக்களை மகிழ்ச்சியுடன் பார்த்து; ஜனரிகெ – அந்த மக்களுக்கு; ஸகல ஸம்பத உதயவாகலு – அனைத்து செல்வங்களும் கிடைப்பதற்கு; ஒதகி பப்பவு – உடனடியாக கிடைக்கும்; மித்யவல்லவு – இது பொய் அல்ல; புதர ஸம்மதவு – இது அறிஞர்களே சொல்லும் வாக்கு ஆகும்; அதகெ நின்னய பதவ நம்பிதெ – அதற்கே உன்னுடைய பாதங்களை நான் நம்பினேன்; முததி – மகிழ்ச்சியுடன்; என்னய ஸதனதலி – என்னுடைய வீட்டில்; நீனு ஒதகி – நீ வந்து; பாக்யத நிதிய பாலிஸு – பாக்கிய நிதியை அருள்வாயாக; பதுமெ நமிஸுவெனு – லட்சுமிதேவியே, உன்னை வணங்குகிறேன்.

உன்னுடைய கருணைப் பார்வையினால் மக்களை மகிழ்ச்சியுடன் பார்த்து, அந்த மக்களுக்கு, அனைத்து செல்வங்களும் உடனடியாக கிடைக்கும். இது பொய் அல்ல. இது அறிஞர்களே சொல்லும் வாக்கு ஆகும். அதற்கே உன்னுடைய பாதங்களை நான் நம்பினேன். மகிழ்ச்சியுடன் என்னுடைய வீட்டில் நீ வந்து, பாக்கிய நிதியை அருள்வாயாக, லட்சுமிதேவியே, உன்னை வணங்குகிறேன்.

**ராமெ நின்னய த்$^{3}$ருஷ்டிலோகக்கெ**
**காமதே$^{4}$னெந்தெ$^{3}$னிஸிகொம்ப$^{3}$து$^{3}$**
**ராமெ நின்னய மனஸு சிந்தாரத்ன ப$^{4}$ஜிபரிகெ$^{3}$**
**ராமெ நின்னய கரத$^{3}$ த்$^{3}$வந்த்$^{3}$வவு**
**காமிதார்த்த$^{2}$வ கேள்வ ஜனரிகெ$^{3}$**
**காமபூர்த்திப கல்பவ்ருக்ஷவு தானெ எனிஸிஹுது$^{3}$ ||88**

ராமெ நின்னய த்ருஷ்டி – லட்சுமிதேவியே, உன்னுடைய கண் பார்வையானது; லோகக்கெ – உலகிற்கு; காமதேனு எந்தெனிஸி கொம்பது – காமதேனு என்று சொல்லப்படுகிறது; ராமெ நின்னய மனஸு – லட்சுமிதேவியே, உன்னுடைய மனம் என்பது; பஜிபரிகெ சிந்தாரத்ன – உன்னை வணங்குபவர்களுக்கு ரத்னத்தைப் போன்றதாகும்; ராமெ நின்னய – லட்சுமிதேவியே, உன்னுடைய; கரத த்வந்த்வவு – இரு கரங்களும்; கேள்வ ஜனரிகெ – உன்னை வேண்டும் மக்களுக்கு; காமிதார்த்தவ – அவர்களின் இஷ்டார்த்தங்களை; காமபூர்த்திப – விருப்பங்களை நிறைவேற்றுவதான; கல்பவ்ருக்ஷவு – கல்ப வ்ருக்ஷம்; தானெ எனிஸுஹுது – என்று சொல்லப்படுகிறது.

லட்சுமிதேவியே, உன்னுடைய கண் பார்வையானது, உலகிற்கு காமதேனு என்று சொல்லப்படுகிறது. லட்சுமிதேவியே, உன்னுடைய மனம் என்பது, உன்னை வணங்குபவர்களுக்கு ரத்னத்தைப் போன்றதாகும். லட்சுமிதேவியே, உன்னுடைய இரு கரங்களும், உன்னை வேண்டும் மக்களுக்கு, அவர்களின் இஷ்டார்த்தங்களை, விருப்பங்களை நிறைவேற்றுவதான கல்ப வ்ருக்ஷம் என்று சொல்லப்படுகிறது.

**நவவெனிபநிதி[4] நீனே இந்தி[3]ரெ**
**தவ த[3]யாபி[4]த[4] ரஸவே எனகே[3]**
**த்[4]ருவதி[3] தே[3]வி ரஸாயனவெ ஸரி ஸர்வகாலத[3]லி**
**பு[4]வன ஸம்ப[4]வெ நின்ன முக[2]வு**
**தி[3]வியொளொப்புவ சந்த்ரனந்த[3]தி[3]**
**விவித[4]களெக[3]ள பூர்ணவாத்[3]யகி[2]ளார்த்த[2] கொடு[3]திஹுது[3] ||89**

நவவெனிப நிதி நீனே – அபாரமான நிதி நீனே; இந்திரெ – லட்சுமிதேவியே; தவ தயாபித ரஸவே எனகெ – உன்னுடைய கருணையுடன் கூடியதான அருளே எனக்கு; தேவி – தேவியே; த்ருவதி ரஸாயனவெ ஸரி – சுவையான உணவு ஆகும்; ஸர்வகாலதலி – அனைத்து காலங்களிலும்; புவன ஸம்பவெ – உலகத்தை காப்பவளே; நின்ன முகவு – உன்னுடைய முகமானது; திவியொளொப்புவ சந்த்ரனந்ததி – பூமியில் இருப்பதான சந்திரனைப் போல; விவித களெகள – களைகளைப் போல;

பூர்ணவாத – முழுமையான; அகிளார்த்த கொடுதிஹுது – என் இஷ்டார்த்தங்கள் அனைத்தையும் நிறைவேற்றுகிறது.

அபாரமான நிதி நீனே. லட்சுமிதேவியே, உன்னுடைய கருணையுடன் கூடியதான அருளே எனக்கு, தேவியே, சுவையான உணவு ஆகும். அனைத்து காலங்களிலும், உலகத்தை காப்பவளே, உன்னுடைய முகமானது, பூமியில் இருப்பதான சந்திரனின் களைகளைப் போல, முழுமையான, என் இஷ்டார்த்தங்கள் அனைத்தையும் நிறைவேற்றுகிறது.

**ரஸத[3] ஸ்பர்ஶத[3]லிந்த[3] லோஹவு**
**மிஸுணி பா[4]வவ ஜதோ[3] தெரத[3]லி**
**அஸம மஹிமளெ நின்ன கருண கடாக்ஷ நோடத[3]லி**
**வஸுதி[4] தளதொ[3]ளகி[3]ர்ப்ப ஜீவர**
**அஶுப[4] கோடிக[3]ளெல்ல போகி[3]**
**குஸும க[3]ந்தி[4]யெ மங்க[3]ளோத்ஸவ ஸததவாகு[3]வுது[3] ||90**

ரஸத ஸ்பர்ஷதலிந்த – ஒரு விதமான ரஸாயனம் பட்டால்; லோஹவு – இரும்பானது; மிஸுணி பாவவ ஜதோ தெரதலி – தங்கமாக மாறுவதைப் போல; அஸம மஹிமளெ – அபாரமான மகிமைகளை கொண்டவளே; நின்ன கருண கடாக்ஷ நோடதலி – உன்னுடைய கருணைப் பார்வையினால்; வஸுதி தளதொளகிர்ப்ப – இந்த பூமியில் இருப்பவர்களான; ஜீவர – மக்களின்; அஶுப கோடிகளெல்ல போகி – கெட்டவை அனைத்தும் விலகி; குஸும கந்தியெ – மலர்களைப் போல நறுமணம் மிக்கவளே; மங்களோத்ஸவ ஸததவாகுவுது – (அந்த மனிதர்களுக்கு) எப்போதும் மங்களங்களே நிறைந்திருக்கும்.

ஒரு விதமான ரஸாயனம் பட்டால், இரும்பானது, தங்கமாக மாறுவதைப் போல, அபாரமான மகிமைகளை கொண்டவளே, உன்னுடைய கருணைப் பார்வையினால், இந்த பூமியில் இருப்பவர்களான மக்களின் கெட்டவை அனைத்தும் விலகி, மலர்களைப் போல நறுமணம் மிக்கவளே, (அந்த மனிதர்களுக்கு) எப்போதும் மங்களங்களே நிறைந்திருக்கும்.

**நீடு3 எந்த3ரெ இல்லவெம்பு3வ**
**ரூடி3 ஜீவர மாதிக3ஞ்ஜுத**
**பே3டி3கொம்பு3த3கீக3 நின்னனு ஶரணு ஹொந்தி3தெ3னு**
**நோடி3 கருண கடாக்ஷதி3ந்த3ய**
**மாடி3 மனத3பி4லாஷெ பூர்த்திஸி**
**நீடு3 எனக3கி2ளார்த்த2 பா4க்3யவ ஹரிய ஸஹிதத3லி ||91**

நீடு எந்தரெ – கொடு என்றால் (உதவி செய் என்றால்); இல்லவெம்புவ – இல்லை என்று சொல்லும்; ரூடி ஜீவர – சாதாரண மக்களின்; மாதிகஞ்ஜுத – பேச்சிற்கு பயந்தவாறு; ஈக – இப்போது; நின்னனு பேடிகொம்புதகெ – உன்னை வேண்டியவாறு; ஷரணு ஹொந்திதெனு – நான் சரணடைந்தேன்; கருண கடாக்ஷதிந்த நோடி – உன் கருணைப் பார்வையால் என்னை பார்த்து; தய மாடி – கருணையுடன்; மனத அபிலாஷெ பூர்த்திஸி – என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி; எனகெ – எனக்கு; அகிளார்த்த – என் இஷ்டார்த்தங்களை; நீடு – அருள்வாயாக; பாக்யவ – பாக்கியங்களை; ஹரிய ஸஹிததலி – ஸ்ரீஹரியுடன் சேர்ந்து.

கொடு என்றால் (உதவி செய் என்றால்) இல்லை என்று சொல்லும், சாதாரண மக்களின் பேச்சிற்கு பயந்தவாறு இப்போது உன்னை வேண்டியவாறு, நான் சரணடைந்தேன். உன் கருணைப் பார்வையால் என்னை பார்த்து கருணையுடன், என் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றி, எனக்கு, என் இஷ்டார்த்தங்களை / பாக்கியங்களை, ஸ்ரீஹரியுடன் சேர்ந்து அருள்வாயாக.

**காமதே4னு ஸுகல்பதரு சிந்**
**தாமணி ஸஹவாகி3 நின்னய**
**காமிதார்த்த2க3ளீவ களெக3ளுணிஸி இருதிஹவு**
**ராமே நின்னய ரஸரஸாயன**
**ஸ்தோமதி3ம் ஶிர பாத3 பாணி**
**ப்ரேமபூர்வக ஸ்பர்ஶவாக3லு ஹேமவாகு3வது3 ||92**

காமதேனு ஸுகல்பதரு சிந்தாமணி – காமதேனு கல்பவ்ருக்ஷ சிந்தாமணி; ஸஹவாகி நின்னய – ஆகியவற்றைப் போல உன்னுடைய; காமிதார்த்தகளீவ களெகளு உணிஸி இருதிஹவு – களைகள் இருந்து, அனைத்து இஷ்டார்த்தங்களையும்

நிறைவேற்றுகிறது; ராமே – லட்சுமிதேவியே; நின்னய ரஸரஸாயன ஸ்தோமதிம் – உன்னுடைய கருணை என்னும் களையினால்; ஷிர பாத பாணி – என் தலை, பாதம், கைகளை; ப்ரேமபூர்வக ஸ்பர்ஷவாகலு – நீ அன்புடன் தொட்டால்; ஹேமவாகுவுது – அவை அனைத்தும் தங்கமாக மாறிவிடும்.

காமதேனு கல்பவ்ருக்ஷ சிந்தாமணி ஆகியவற்றைப் போல உன்னுடைய களைகள் இருந்து, அனைத்து இஷ்டார்த்தங்களையும் நிறைவேற்றுகிறது. லட்சுமிதேவியே, உன்னுடைய கருணை என்னும் களையினால், என் தலை, பாதம், கைகளை, நீ அன்புடன் தொட்டால், அவை அனைத்தும் தங்கமாக மாறிவிடும்.

**ஆதி$^{3}$ விஷ்ணுன த$^{4}$ர்மபத்னியெ**
**ஸாத$^{3}$ரதி$^{3}$ ஹரி ஸஹித என்னலி**
**மோத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$லி ஸன்னிதா$^{4}$னவ மாடெ கருணத$^{3}$லி**
**ஆதி$^{3}$ லக்ஷ்மியெ பரமானுக்$^{3}$ரஹ**
**வாத$^{3}$ மாத்ரதி$^{3}$ எனகெ$^{3}$ பது$^{3}$ பதெ$^{3}$**
**ஆத$^{3}$புது$^{3}$ ஸர்வத்ர ஸர்வத$^{3}$ நிதி$^{4}$ய த$^{3}$ர்ஶனவு ||93**

ஆதி விஷ்ணுன தர்மபத்னியெ – ஆதி விஷ்ணுவின் மனைவியே; ஹரி ஸஹித – ஸ்ரீஹரியுடன்; ஸாதரதி – கருணையுடன்; என்னலி – என் மேல்; மோததிந்தலி – மகிழ்ச்சியுடன்; ஸன்னிதானவ மாடெ – அருள் புரிவாயாக; கருணதலி – கருணையுடன்; ஆதி லக்ஷ்மியே – ஆதி லட்சுமியே; பரமானுக்ரஹவாத மாத்ரதி – உன்னுடைய அருள் எனக்கு கிடைத்த உடனேயே; எனகெ – எனக்கு; பது பத ஆதபுது – என் விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறும்; ஸர்வத்ர ஸர்வத – எங்கேயும் எப்போதும்; நிதிய தர்ஷனவு – எனக்கு செல்வங்கள் கிடைக்கும்.

ஆதி விஷ்ணுவின் மனைவியே, ஸ்ரீஹரியுடன், கருணையுடன், என் மேல் மகிழ்ச்சியுடன் கருணையுடன் அருள் புரிவாயாக. ஆதி லட்சுமியே, உன்னுடைய அருள் எனக்கு கிடைத்த உடனேயே, எனக்கு; என் விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறும். எங்கேயும் எப்போதும், எனக்கு செல்வங்கள் கிடைக்கும்.

**ஆவ லக்ஷ்மி ஹ்ருத[3]ய மந்த்ரவ**
**ஸாவதா[4]னதி[3] பட[2]ணெகெ[3]ய்வனு**
**ஆவ காலதி[3] ராஜ்யலக்ஷ்மியனைது[3] ஸுகி[2]ஸுவனு**
**ஆவ மஹாதா[3]ரித்[3]ர்ய தோ[3]ஷியு**
**ஸேவிஸெ மஹா த[4]னிக[1]னாகு[3]வ**
**தே[3]வி அவனாலயதி[3] ஸர்வதா[3] ஸ்தி[2]ரதி[3] நிலிஸுவளு ||94**

ஆவ – யாரொருவன்; லக்ஷ்மி ஹ்ருதய மந்த்ரவ – லட்சுமி ஹ்ருதய என்னும் இந்த கிருதியை; ஸாவதானதி – கவனத்துடன்; படணெகெய்வனு – படிக்கிறானோ; ஆவ காலதி – அவன் அந்த காலத்தில்; ராஜ்யலக்ஷ்மியனைது – ராஜ்ய லட்சுமியின் அருளைப் பெற்று; ஸுகிஸுவனு – மகிழ்கிறான்; ஆவ – யாரொருவன்; மஹாதாரித்ர்ய தோஷியு – ஏழ்மை கொண்டவன்; ஸேவிஸெ – லட்சுமியை வணங்குகிறானோ; மஹா தனிகனாகுவ – அவன் மிகவும் செல்வந்தன் ஆகிறான்; தேவி – லட்சுமிதேவி; அவனாலயதி – அவனுடைய வீட்டில்; ஸர்வதா – எப்போதும்; ஸ்திரதி நிலிஸுவளு – நிரந்தரமாக நிலைத்திருக்கிறாள்.

யாரொருவன், லட்சுமி ஹ்ருதய என்னும் இந்த கிருதியை கவனத்துடன் படிக்கிறானோ, அவன் அந்த காலத்தில், ராஜ்ய லட்சுமியின் அருளைப் பெற்று, மகிழ்கிறான். யாரொருவன், ஏழ்மை கொண்டவன், லட்சுமியை வணங்குகிறானோ, அவன் மிகவும் செல்வந்தன் ஆகிறான். லட்சுமிதேவி, அவனுடைய வீட்டில் எப்போதும் நிரந்தரமாக நிலைத்திருக்கிறாள்.

**லகுமி ஹ்ருத[3]யத[3] பட[2]ணெ மாத்ரதி[3]**
**லகுமி தா ஸந்துஷ்டளாகி[3]**
**ஸகல து[3]ரிதக[3]ளளிது[3] ஸுக[2] ஸௌபா[4]க்[3]ய கொடு[3]திஹளு**
**விகஸிதானனெ விஷ்ணுவல்லபெ[4]**
**ப[4]குத ஜனரனு ஸர்வ காலதி[3]**
**வ்யகுதளாத்[3]யவரன்ன பொரெவளு த[1]னயரந்த[3]த[3]லி ||95**

லகுமி ஹ்ருதயத – லட்சுமி ஹ்ருதய என்னும் இந்த கிருதியை; படணெ மாத்ரதி – படித்த உடனேயே; லகுமி தா – லட்சுமியானவள்; ஸந்துஷ்டளாகி – திருப்தி அடைந்து; ஸகல துரிதகளளிது – அனைத்து கஷ்டங்களையும் விலக்கி; ஸுக

ஸௌபாகிய கொடுதிஹளு - சுக ஸௌபாக்கியங்களை அருள்கிறாள்; விகஸிதானனெ - மலர்ந்த முகத்தை கொண்டவளே; விஷ்ணு வல்லபெ - விஷ்ணுவின் மனைவியே; பகுத ஜனரனு - உன் பக்தர்களை; ஸர்வ காலதி - அனைத்து காலங்களிலும்; வ்யகுதளாத்யவரன்ன - அவர்களுக்கு தரிசனம் அளித்து; தனயரந்ததலி பொரெவளு - தன் மக்களைப் போல அவர்களை காக்கிறாள்.

லட்சுமி ஹ்ருதய என்னும் இந்த கிருதியை படித்த உடனேயே, லட்சுமியானவள், திருப்தி அடைந்து அனைத்து கஷ்டங்களையும் விலக்கி, சுக ஸௌபாக்கியங்களை அருள்கிறாள். மலர்ந்த முகத்தை கொண்டவளே, விஷ்ணுவின் மனைவியே, உன் பக்தர்களை அனைத்து காலங்களிலும், அவர்களுக்கு தரிசனம் அளித்து, தன் மக்களைப் போல அவர்களை காக்கிறாள்.

**தே$^3$வி ஹ்ருத$^3$யவு பரம கோ$^3$ப்யவு**
**ஸேவகனிக$^3$கி$^2$ளார்த்த$^2$ கொடு$^3$வுது$^3$**
**பா$^4$வ பூர்வக பஞ்சஸாவிர ஜபிஸெ புனஶ்சரண**
**ஈ விதா$^4$னதி$^3$ பட$^2$ணெ மாட$^3$லு**
**தா ஒலிது$^3$ ஸௌபா$^4$க்$^3$ய நிதி$^4$யனு**
**தீவ்ரதி$^3$ந்த$^3$லி கொட்டு ஸேவகரல்லி நிலிஸுவளு ||96**

தேவி ஹ்ருதயவு - இந்த லட்சுமி ஹ்ருதய கிருதியானது; பரம கோப்யவு - மிகவும் ரகசியமானது; ஸேவகனிகெ - இதை படிப்பவனுக்கு; அகிளார்த்த கொடுவுது - அவன் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றுகிறது; பாவ பூர்வக - பக்தியுடன்; பஞ்சஸாவிர ஜபிஸெ - இதனை 5,000 முறை ஜெபித்தால்; புனஸ்சரண ஈ விதானதி படணெ மாடலு - இதனை புனஸ்சரண ரீதியாக படித்தால்; தா ஒலிது - லட்சுமிதேவியானவள், தான் தரிசனம் அளித்து; ஸௌபாக்ய நிதியனு - அபாரமான செல்வங்களை; தீவ்ரதிந்தலி கொட்டு - அபாரமாக கொடுத்து; ஸேவகரல்லி நிலிஸுவளு - தன் பக்தர்களிடம் நிலைத்திருப்பாள்.

இந்த லட்சுமி ஹ்ருதய கிருதியானது, மிகவும் ரகசியமானது. இதை படிப்பவனுக்கு, அவன் இஷ்டார்த்தங்களை

நிறைவேற்றுகிறது. பக்தியுடன், இதனை 5,000 முறை ஜெபித்தால், இதனை புனஸ்சரண ரீதியாக படித்தால், லட்சுமிதேவியானவள், தான் தரிசனம் அளித்து, அபாரமான செல்வங்களை, அபாரமாக கொடுத்து, தன் பக்தர்களிடம் நிலைத்திருப்பாள்.

**மூரு காலதி$^{3}$ ஜபிஸலுத்தம**
**ஸார ப$^{4}$குதிலி ஒந்து$^{3}$ காலதி$^{3}$**
**தீ$^{4}$ரமானவ படி$^{2}$ஸலவனகி$^{2}$ளார்த்த$^{2}$ ஜது$^{3}$வனு**
**ஆரு பட$^{2}$ணவகெ$^{3}$ய்யலித$^{3}$னனு**
**பூ$^{4}$ரி ஶ்ரவணவ கெ$^{3}$ய்த$^{3}$ மானவ**
**பா$^{3}$ரி பா$^{3}$ரிகெ$^{3}$ த$^{4}$னவ க$^{3}$ளிஸுவ ஸிரிய கருணத$^{3}$லி ||97**

மூரு காலதி – இந்த லட்சுமி ஹ்ருதயத்தை, மூன்று காலங்களில்; ஜபிஸலுத்தம – படித்தால் அது உத்தமமான செயலாகும்; ஸார பகுதிலி – மிகவும் பக்தியுடன்; ஒந்து காலதி – ஒரு முறை; தீவிரமானவ படிஸலு – பக்தனானவன் படிக்கையில்; அவன அகிளார்த்த ஜதுவனு – அவன் அனைத்து இஷ்டார்த்தங்களையும் அடைகிறான்; ஆரு படணவ கெய்யலு – இதனை வேறு யாராவது படிக்கையில்; இதனனு – பூரி ஸ்ரவணவ கெய்த மானவ – இதனை கேட்ட மனிதன்; பாரி பாரிகெ – திரும்பத்திரும்ப; ஸிரிய கருணதலி – ஸ்ரீதேவியின் கருணையால்; தனவ களிஸுவ – செல்வத்தை அடைகிறான்.

இந்த லட்சுமி ஹ்ருதயத்தை, மூன்று காலங்களில் படித்தால், அது உத்தமமான செயலாகும். மிகவும் பக்தியுடன், ஒரு முறை, பக்தனானவன் படிக்கையில், அவன் அனைத்து இஷ்டார்த்தங்களையும் அடைகிறான். இதனை வேறு யாராவது படிக்கையில், இதனை கேட்ட மனிதன், திரும்பத்திரும்ப ஸ்ரீதேவியின் கருணையால், செல்வத்தை அடைகிறான்.

**ஸ்ரீ மஹத்தர லக்ஷ்மி கோ$^{3}$ஸுக$^{3}$**
**ஈ மஹத்தர ஹ்ருத$^{3}$ய மந்த்ரவ**
**ப்ரேமபூர்வக பா$^{4}$ர்க்க$^{3}$வாரத$^{3}$ ராத்ரி ஸமயத$^{3}$லி**
**நேமதி$^{3}$ந்த$^{3}$லி பஞ்சவாரவ**
**காமிஸீபரி பட$^{2}$ணெ மாட$^{3}$லு**

**காமிதார்த்த2வனெய்தி3 லோகதி3 பா3ள்வ முத3தி3ந்த3 ||98**

மஹத்தர ஶ்ரீலக்ஷ்மி கோஸுக – மகாமகிமைகள் பொருந்தியவளான ஶ்ரீலட்சுமிதேவியின் அருளைப் பெறுவதற்காக; ஈ மஹத்தர ஹ்ருதய மந்த்ரவ – இந்த லட்சுமி ஹ்ருதய கிருதியினை; ப்ரேமபூர்வக – மிகவும் பக்தியுடன்; பார்க்க வாரத ராத்ரி ஸமயதலி – வெள்ளிக்கிழமை இரவில்; நேமதிந்தலி – விதிப்படி; பஞ்ச வாரவ – ஐந்து வாரங்கள் வரை; காமிஸி ஈ பரி – சங்கல்பம் செய்து, இவ்வாறாக; படணெ மாடலு – படித்து வந்தால்; காமிதார்த்தவனு – (அவன்), தன் இஷ்டார்த்தங்களை; யெய்தி – அடைந்து; லோகதி பாள்வ முததிந்த – உலகில் மிகவும் மகிழ்ச்சியுடன் வாழ்வான்.

மகாமகிமைகள் பொருந்தியவளான ஶ்ரீலட்சுமிதேவியின் அருளைப் பெறுவதற்காக, இந்த லட்சுமி ஹ்ருதய கிருதியினை, மிகவும் பக்தியுடன் வெள்ளிக்கிழமை இரவில், விதிப்படி, ஐந்து வாரங்கள் வரை சங்கல்பம் செய்து, இவ்வாறாக படித்து வந்தால், (அவன்), தன் இஷ்டார்த்தங்களை அடைந்து, உலகில் மிகவும் மகிழ்ச்சியுடன் வாழ்வான்.

**ஸிரிய ஹ்ருத3ய ஸுமந்த்ரதி3ந்த3லி**
**ஸ்மரிஸி அன்னவ மந்த்ரிஸிட3லு**
**ஸிரிய பதி தா1னவர மந்தி3ரதொ3ளகெ3 அவதரிப**
**நரனெ ஆக3லி நாரி ஆக3லி**
**ஸிரிய ஹ்ருத3ய ஸுமந்த்ரதி3ந்த3லி**
**நிருத மந்த்ரித ஜலவ குடி3யலு த4னிக புட்டுவனு ||99**

ஹ்ருதய ஸுமந்த்ரதிந்தலி – இந்த லட்சுமி ஹ்ருதய கிருதியினால்; ஸிரிய – ஶ்ரீலட்சுமி தேவியை; ஸ்மரிஸி – நினைத்து, வணங்கி; அன்னவ மந்த்ரிஸிடலு – அன்னத்தை நைவேத்தியம் செய்து உண்டால்; ஸிரிய பதி தானு – ஶ்ரீஹரியானவன்; அவர மந்திரதொளகெ – அவர்களின் வீட்டில்; அவதரிப – அவதரிக்கிறான்; நரனெ ஆகலி – ஒரு ஆணோ; நாரி ஆகலி – அல்லது பெண்ணோ; ஹ்ருதய ஸுமந்திரதிந்தலி – இந்த லட்சுமி ஹ்ருதய கிருதியினால்; ஸிரிய – ஶ்ரீலட்சுமி தேவியை;

நிருத மந்த்ரித ஜலவ - மந்திரித்த தண்ணீரை; குடியலு - குடிக்க; தனிக புட்டுவனு - அவன் / அவள் செல்வத்தை பெறுகிறான்.

இந்த லட்சுமி ஹ்ருதய கிருதியினால், ஶ்ரீலட்சுமி தேவியை, நினைத்து, வணங்கி, அன்னத்தை நைவேத்தியம் செய்து உண்டால், ஶ்ரீஹரியானவன், அவர்களின் வீட்டில் அவதரிக்கிறான். ஒரு ஆணோ, அல்லது பெண்ணோ, இந்த லட்சுமி ஹ்ருதய கிருதியினால், ஶ்ரீலட்சுமி தேவியை மந்திரித்த தண்ணீரை குடிக்க, அவன் / அவள் செல்வத்தை பெறுகிறான்.

**ஆவனாஶ்வீஜ ஶுக்ல பக்ஷதி3**
**தே3வி உத்ஸவ காலதொ3ளு தா**
**பா4வ ஷுத்3தி3லி ஹ்ருத3ய ஜப ஒந்த3தி4க தி3னதி3னதி3**
**ஈ விதா4னதி3 ஜபவ மாட3லு**
**ஶ்ரீவனதி3 ஸம்பத3வனெய்து3வ**
**ஶ்ரீவனிதெ தா கனகவ்ருஷ்டிய கரெவளனவரத ||100**

ஆவனு - யாரொருவன்; ஆஸ்வீஜ ஷுக்ல பக்ஷதி - ஆஸ்வீஜ மாத சுக்ல பட்சத்தில்; தேவி உத்ஸவ காலதொளு - தேவி நவராத்திரியின் சமயத்தில்; தா பாவ ஷுத்திலி - தான் மிகவும் தூய்மையான மனதுடன்; ஹ்ருதய ஜப - இந்த லட்சுமி ஹ்ருதய ஜபத்தினை; ஒந்ததிக தினதினதி - ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு எண்ணிக்கை அதிகமாக ஜபம் செய்ய; ஈ விதானதி ஜபவ மாடலு - இவ்வாறாக ஜபம் செய்ய; ஶ்ரீவனதி ஸம்பதவனெய்துவ - ஶ்ரீஹரியின் அருளை பெறுகிறான்; ஶ்ரீவனிதெ தா - ஶ்ரீலட்சுமிதேவி, தான்; கனகவ்ருஷ்டிய - தங்க மழையை; கரெவளனவரத - பொழிகிறாள்.

யாரொருவன், ஆஸ்வீஜ மாத சுக்ல பட்சத்தில், தேவி நவராத்திரியின் சமயத்தில், தான் மிகவும் தூய்மையான மனதுடன், இந்த லட்சுமி ஹ்ருதய ஜபத்தினை, ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு எண்ணிக்கை அதிகமாக ஜபம் செய்ய, இவ்வாறாக ஜபம் செய்ய, ஶ்ரீஹரியின் அருளை பெறுகிறான். ஶ்ரீலட்சுமிதேவி, தங்க மழையை பொழிகிறாள்.

**ஆவ ப$^{4}$குதனு வருஷ தி$^{3}$ன தி$^{3}$ன**
**பா$^{4}$வ ஶுத்$^{3}$தி$^{3}$லி எல்ல பொத்து**
**ஸாவதா$^{4}$னதி$^{3}$ ஹ்ருத$^{3}$ய மந்த்ரவ படி$^{2}$ஸலவனாக$^{3}$**
**தே$^{3}$வி கருணகடாக்ஷதி$^{3}$ந்த$^{3}$லி**
**தே$^{3}$வ இந்த்$^{3}$ரனிக$^{3}$தி$^{4}$கனாகு$^{3}$வ**
**ஈ வஸுந்த$^{4}$ரெயொளகெ$^{3}$ பா$^{4}$க்$^{3}$யத$^{3}$ நிதி$^{2}$யு தானெனிப ||101**

ஆவ பகுதனு – எந்த பக்தன்; வருஷ தின தின – ஆண்டின் அனைத்து நாட்களிலும்; பாவ ஶுத்திலி – மிகவும் தூய்மையான மனதுடன்; ஸாவதானதி – கவனத்துடன்; ஹ்ருதய மந்த்ரவ – லட்சுமி ஹ்ருதய கிருதியை; படிஸலவனாக – படிக்கிறானோ, அவன்; தேவி கருணகடாக்ஷதிந்தலி – ஸ்ரீதேவியின் கருணையினால்; எல்ல பொத்து – அனைத்து அருளையும் பெற்று; தேவ இந்த்ரனிகதிகனாகுவ – தேவ இந்திரனைவிட அதிகமாக ஆகிறான்; ஈ வஸுந்தரெயொளகெ – இந்த பூமியில்; பாக்யத நிதியு தானெனிப – தானே பாக்கியசாலி எனப்படுகிறான்.

எந்த பக்தன், ஆண்டின் அனைத்து நாட்களிலும் மிகவும் தூய்மையான மனதுடன், கவனத்துடன், லட்சுமி ஹ்ருதய கிருதியை படிக்கிறானோ, அவன், ஸ்ரீதேவியின் கருணையினால், அனைத்து அருளையும் பெற்று, தேவ இந்திரனைவிட அதிகமாக ஆகிறான். இந்த பூமியில் தானே பாக்கியசாலி எனப்படுகிறான்.

**ஸ்ரீஶ பத$^{3}$த$^{3}$லி ப$^{4}$குதி ஹரிபத$^{3}$**
**தா$^{3}$ஸ ஜனபத$^{3}$ தா$^{3}$ஸ பா$^{4}$வவ**
**ஈஸு மந்த்ரக$^{3}$ளர்த்த$^{2}$ ஸித்$^{3}$தி$^{3}$யு கு$^{3}$ருபத$^{3}$ ஸ்ம்ருதியு**
**லேஸு ஞான ஸுபு$^{3}$த்$^{3}$தி$^{3}$ பாலிஸு**
**வாஸவாகி$^{3}$ரு என்ன மனெயலி**
**ஈஶ ஸஹ என தாயெ உத்தம பத$^{3}$வு நீ ஸிரியே ||102**

ஸ்ரீஶ பததலி பகுதி – ஸ்ரீஹரியின் பாதங்களின் பக்தியை அருள்வாயாக; ஹரிபத தாஸ – ஸ்ரீஹரியின் பாதங்களின் தாஸனாக என்னை ஆக்கு; ஜனபத தாஸ பாவவ ஈசு – ஹரிதாஸர்களின் தாஸனாக என்னை ஆக்கு; மந்த்ரகளர்த்த ஸித்தியு – நான் படிக்கும் இந்த மந்திரங்களின் ஸித்தி எனக்கு ஆகுமாறு செய்வாயாக; குருபத ஸ்ம்ருதியு – குருகளின் பாத

ஸ்மரணையை எனக்கு எப்போதும் அளிப்பாயாக; லேஸு ஞான ஸுபுத்தி பாலிஸு – நிர்மலமான ஞான பக்தியை அருள்வாயாக; ஈஶ ஸஹ – ஸ்ரீஹரியுடன்; வாஸவாகிரு என்ன மனெயலி – என்னுடைய வீட்டில் எப்போதும் வசித்திரு; என தாயெ – என் தாயே; உத்தம பதவு – கடைசியாக மோட்சத்தையே கொடுப்பாயாக; நீ ஸிரியே – ஹே லட்சுமிதேவியே.

ஹே லட்சுமிதேவியே, ஸ்ரீஹரியின் பாதங்களின் பக்தியை எனக்கு அருள்வாயாக. ஸ்ரீஹரியின் பாதங்களின் தாஸனாக என்னை ஆக்குவாயாக. ஹரிதாஸர்களின் தாஸனாக என்னை ஆக்குவாயாக. நான் படிக்கும் இந்த மந்திரங்களின் ஸித்தி எனக்கு ஆகுமாறு செய்வாயாக. குருகளின் பாத ஸ்மரணையை எனக்கு எப்போதும் அளிப்பாயாக. நிர்மலமான ஞான பக்தியை அருள்வாயாக. ஸ்ரீஹரியுடன் என் வீட்டில் எப்போதும் வசித்திருப்பாயாக. என் தாயே, கடைசியில் எனக்கு மோட்சத்தையே கொடுப்பாயாக.

**த$^{4}$ரணி பாலகனெனிஸு என்னனு**
**புருஷருத்தமனெனிஸு ஸர்வதா$^{3}$**
**பரமவைப$^{4}$வ நானாவித$^{4}$வாத$^{3}$ர்த்த$^{2}$ ஸித்$^{3}$தி$^{3}$க$^{3}$ளா**
**பிரிது$^{3}$ கீர்த்திய ப$^{3}$ஹள போ$^{4}$க$^{3}$வ**
**பரம ப$^{4}$க்தி ஞான ஸுமதிய**
**பரிமிதில்லதெ$^{3}$ இத்து புனரபி ஸலஹு ஸ்ரீதே$^{3}$வீ||103**

ஹே லட்சுமிதேவியே, தரணி பாலகனெனிஸு என்னனு – எனக்கு பூமியை (நிலத்தை) அளிப்பாயாக; புருஷருத்தமெனெனிஸு ஸர்வதா – எப்போதும் என்னை மிகச் சிறந்தவன் (புகழ் பெற்றவன்) என்று ஆக்கு; பரமவைபவ – மிகச் சிறந்ததான; நானாவிதவாத – பற்பல விதங்களான; அர்த்த ஸித்திகளா பிரிது – என் இஷ்டார்த்தங்களை அளித்து; கீர்த்திய பஹள போகவ – எனக்கு புகழினை, போகங்களை; பரம பக்தி ஞான ஸுமதிய – அபாரமான பக்தி, ஞான, அறிவினை; பரிமிதில்லதெ இத்து – எல்லையில்லாமல் வழங்கி; புனரபி ஸலஹு ஸ்ரீதேவி – எனக்கு எப்போதும் வழங்குவாயாக ஸ்ரீதேவியே.

ஹே லட்சுமிதேவியே, எனக்கு பூமியை (நிலத்தை) அளிப்பாயாக. எப்போதும் என்னை மிகச் சிறந்தவன் (புகழ் பெற்றவன்) என்று ஆக்கு. மிகச் சிறந்ததான, பற்பல விதங்களான, என் இஷ்டார்த்தங்களை அளித்து எனக்கு புகழினை, போகங்களை, அபாரமான பக்தி, ஞான, அறிவினை, எல்லையில்லாமல் வழங்கி, எனக்கு எப்போதும் வழங்குவாயாக ஸ்ரீதேவியே.

**வாத$^3$மாடுத$^3$க$^1$ர்த்த$^2$ ஸித்$^3$தி$^3$யு**
**மோத$^3$தீர்த்த$^2$ர மததி$^3$ தீ$^3$க்ஷவு**
**ஸாத$^3$ரதி$^3$ நீனித்து பாலிஸு வேத$^3$த$^3$பி$^4$மானீ**
**மோத$^3$த$^3$லி புத்ரார்த்த$^2$ ஸித்$^3$தி$^3$யு**
**ஓத$^3$த$^3$லெ ஸிரி பி$^3$ரம்மவித்$^3$யவு**
**ஆதி$^3$ பா$^4$ர்க்க$^3$வி இத்து பாலிஸு ஜன்ம ஜன்மத$^3$லீ ||104**

வாதமாடுதகர்த்த ஸித்தியு – வாதம் செய்வதற்கு எனக்கு தக்க ஞானம் வேண்டும்; மோத தீர்த்தர மததி தீக்ஷவு – ஸ்ரீமதாசார்யரின் மதத்தில் தத்வவாதத்தில் எனக்கு ஞானம் வேண்டும்; ஸாதரதி நீனித்து பாலிஸு – இவற்றை நீ எனக்கு அளித்து அருள்வாயாக; வேததபிமானி – வேதங்களுக்கு அபிமானியே; மோததலி புத்ரார்த்த ஸித்தியு – எனக்கு மக்கட்செல்வங்களை மகிழ்ச்சியுடன் அருள்வாயாக; ஓததலெ ஸிரி பிரம்மவித்யவு – படிக்காமலேயே எனக்கு பிரம்ம வித்யைகள் அனைத்தும் கைகூட வேண்டும்; ஆதி பார்க்கவி – ஆதி லட்சுமியே; இத்து பாலிஸு ஜன்ம ஜன்மதலீ – இந்த அனைத்தையும் அனைத்து பிறவிகளிலும் எனக்கு அளித்து, அருள்வாயாக.

ஹே லட்சுமிதேவியே, வாதம் செய்வதற்கு எனக்கு தக்க ஞானம் வேண்டும். ஸ்ரீமதாசார்யரின் மதத்தில் தத்வவாதத்தில் எனக்கு ஞானம் வேண்டும். இவற்றை நீ எனக்கு அளித்து அருள்வாயாக. வேதங்களுக்கு அபிமானியே, எனக்கு மக்கட்செல்வங்களை மகிழ்ச்சியுடன் அருள்வாயாக. படிக்காமலேயே எனக்கு பிரம்ம வித்யைகள் அனைத்தும் கைகூட வேண்டும். ஆதி லட்சுமியே, இந்த அனைத்தையும் அனைத்து பிறவிகளிலும் எனக்கு அளித்து, அருள்வாயாக.

**ஸ்வர்ண வ்ருஷ்டிய என்ன மனெயலி**
**கரிய தா4ன்ய ஸும்ருத்தி தி3ன தி3ன**
**ப4ரதி3 நீ கல்யாண வருத்3தி3ய மாடெ3 ஸம்ப்4ரமதி3**
**ஸிரியெ அதுள விபூ4தி வ்ருத்3தி3ய**
**ஹருஷதி3ந்த3லிகெ3ய்து3 த4ரெயொளு**
**மெரெயெ ஸந்தத உபமெவில்லதெ3 ஹரிய நிஜ ராணி ||105**

என்ன மனெயலி – என் வீட்டில்; ஸ்வர்ண வ்ருஷ்டிய – தங்க மழையை பெய்வாயாக; கரிய தான்ய ஸ்ம்ருத்தி – அபாரமான தன, தான்யங்களை; தினதின – தினம்தோறும்; ஸம்ப்ரமதி – மிகவும் சிறப்புடன்; பரதி நீ கல்யாண வருத்திய மாடெ – நீ அனைத்து மங்களங்களையும் அபாரமாக எனக்கு அருள்வாயாக; ஸிரியெ – ஹே லட்சுமிதேவியே; அதுள விபூதி வ்ருத்திய – உன்னுடைய சிறப்பான ருபத்தில்; ஹருஷதிந்தலிகெய்து – மிகவும் மகிழ்ச்சியுடன்; தரெயொளு மெரெயெ – இந்த பூமியில் வருவாயாக; ஸந்தத உபமெவில்லதெ – எப்போதும் யாருக்கும் ஒப்புமை செய்யமுடியாதவளான; ஹரிய நிஜ ராணி – ஸ்ரீஹரியின் நிஜ ராணியே.

என் வீட்டில் தங்க மழையை பெய்வாயாக. அபாரமான தன, தான்யங்களை, தினம்தோறும், மிகவும் சிறப்புடன், நீ அனைத்து மங்களங்களையும் அபாரமாக எனக்கு அருள்வாயாக. ஹே லட்சுமிதேவியே, உன்னுடைய சிறப்பான ருபத்தில், மிகவும் மகிழ்ச்சியுடன், இந்த பூமியில் வருவாயாக. எப்போதும் யாருக்கும் ஒப்புமை செய்யமுடியாதவளான ஸ்ரீஹரியின் நிஜ ராணியே.

**மந்த3ஹாஸ முகாரவிந்த3ளெ**
**இந்து3ஸூர்யர கோடிபா4ஸளெ**
**ஸுந்த3ராங்கி3யெ பீதவஸனளெ ஹேமபூ4ஷணளெ**
**குந்து3 இல்லத3 பீ3ஜ பூரித**
**சந்த3வாத3 ஸுஹேம கலஶக3**
**ளிந்த3 நீனொட3கூ3டி3 தீவ்ரதி3 ப3ருவுதெ3ன்ன மனெகெ3 ||106**

மந்தஹாஸ முகாரவிந்தளெ – புன்னகைகூடிய முகத்தை கொண்டவளே; இந்து ஸூர்யர கோடிபாஸளெ – கோடி சூரிய, சந்திரர்களின் ஒளியைக் கொண்டவளே; ஸுந்தராங்கியெ –

அழகானவளே; பீதவஸனளெ – மஞ்சள் வண்ண ஆடையை உடுத்தியவளே; ஹேமபூஷணளெ – தங்கமயமான அணிகலன்களை அணிந்தவளே; குந்து இல்லத – எவ்வித குறைகளும் இல்லாத; பீஜ பூரித – தானியங்கள் நிறைந்த; சந்தவாத ஸுஹேம – அழகான தங்கமயமான; கலஶகளிந்த – கலசங்களை கொண்டவாறு; நீனொடகூடி – நீ; தீவ்ரதி பருவுதென்ன மனெகெ – என்னுடைய வீட்டிற்கு உடனடியாக வருவாயாக.

புன்னகைகூடிய முகத்தை கொண்டவளே. கோடி சூரிய, சந்திரர்களின் ஒளியைக் கொண்டவளே. அழகானவளே. மஞ்சள் வண்ண ஆடையை உடுத்தியவளே. தங்கமயமான அணிகலன்களை அணிந்தவளே. எவ்வித குறைகளும் இல்லாத, தானியங்கள் நிறைந்த, அழகான தங்கமயமான, கலசங்களை கொண்டவாறு, நீ, என்னுடைய வீட்டிற்கு உடனடியாக வருவாயாக.

**நமிபெ ஸ்ரீஹரி ராணி நின்ன பத$^{3}$**
**கமலயுக$^{3}$க$^{3}$னவரத ப$^{4}$குதிலி**
**கமலெ நின்னய விமல கரயுக$^{3}$ என்ன மஸ்தகதீ$^{3}$**
**மமதெயிந்த$^{3}$லி இட்டு நிஶ்சல**
**அமித பா$^{4}$க்$^{3}$யவ நீடெ$^{3}$ த்வரதி$^{3}$**
**கமலஜாதளெ ரமெயெ நமோ நமோ மாள்பெனனவரத ||107**

ஸ்ரீஹரி ராணி நின்ன பத – ஸ்ரீஹரியின் ராணியே, உன் பாதங்களை; கமலயுககனவரத பகுதிலி – தாமரையில் அமர்ந்திருப்பவளே, எப்போதும் பக்தியுடன்; நமிபெ – நான் வணங்குகிறேன்; கமலெ – அழகானவளே; நின்னய விமல கரயுக – உன்னுடைய குறைகள் அற்றதான கைகளை; என்ன மஸ்தகதி – என்னுடைய தலையில்; மமதெயிந்தலி இட்டு – எவ்வித தோஷங்களும் இன்றி வைத்து; நிஶ்சல – நிரந்தரமான; அமித பாக்யவ நீடெ த்வரதி – உடனடியாக அபாரமான பாக்கியத்தை அருள்வாயாக; கமலஜாதளெ – தாமரையில் அமர்ந்திருப்பவளே; ரமெயெ – ஸ்ரீரமாதேவியே; நமோ நமோ மாள்பெனனவரத – உன்னை திரும்பத்திரும்ப நான் வணங்குகிறேன்.

ஸ்ரீஹரியின் ராணியே, தாமரையில் அமர்ந்திருப்பவளே, எப்போதும் பக்தியுடன் உன் பாதங்களை நான் வணங்குகிறேன். அழகானவளே, உன்னுடைய குறைகள் அற்றதான கைகளை, என்னுடைய தலையில், எவ்வித தோஷங்களும் இன்றி வைத்து, நிரந்தரமான, அபாரமான பாக்கியத்தை உடனடியாக அருள்வாயாக. தாமரையில் அமர்ந்திருப்பவளே, ஸ்ரீரமாதேவியே, உன்னை திரும்பத்திரும்ப நான் வணங்குகிறேன்.

**மாதெ நின்னய ஜட2ரகமல ஸு**
**ஜாதனாகி3ஹ ஸுதன தெரத3லி**
**ப்ரீதி பூர்வக பா4க்3ய நிதி4க3ளனித்து நித்யத3லி**
**நீத ப4குதீ ஞான பூர்வக**
**தா3த கு3ரு ஜக3ன்னாத2 விட்டலன**
**ப்ரீதிகொ3ளிஸுவ பா4க்3ய பாலிஸி பொரெயெ நீயென்ன ||108**

மாதெ – ஹே தாயே; நின்னய ஜடரகமல – தாமரை போன்றதான உன் வயிற்றில்; ஸுஜாதனாகிஹ ஸுதன தெரதலி – பிறந்த மகனைப் போல; ப்ரீதி பூர்வக – என்னை நினைத்து, மிகவும் அன்புடன்; பாக்ய நிதிகளனித்து – பாக்கியங்களை அருளி; நித்யதலி – நிரந்தரமான; நீத பகுதி ஞான பூர்வக – குறைகளற்ற ஞான பக்தியுடன்; தாத குரு ஜகன்னாத விட்டலன – தந்தையான ஸ்ரீகுரு ஜகன்னாத விட்டலனின்; ப்ரீதி கொளிஸுவ – அன்பினைப் பெறுவதான; பாக்ய பாலிஸி – பாக்கியத்தை அருளி; பொரெயெ நீயென்ன – என்னை காப்பாயாக.

ஹே தாயே, தாமரை போன்றதான உன் வயிற்றில் பிறந்த மகனைப் போல என்னை நினைத்து, மிகவும் அன்புடன், பாக்கியங்களை அருளி, நிரந்தரமான, குறைகளற்ற ஞான பக்தியுடன், தந்தையான ஸ்ரீகுரு ஜகன்னாத விட்டலனின் அன்பினைப் பெறுவதான பாக்கியத்தை அருளி என்னை காப்பாயாக.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

***